423

ஸ்ரீ ஹரி:

# கர்ம - ரஹஸ்யம்

कर्म-रहस्य ( तमिल )



சுவாமி ராம்ஸுகதாஸ்

10-1 11

ஸ்ரீ ஹரி:

# கர்ம - ரஹஸ்யம்



எழுதியவர்:

சுவாமி ராம்ஸுகதாஸ்

ஸ்ரீ ஹரி:


| | | |
|---|---|---|
| First Three Editions | 1992—1995 | 22,000 Copies |
| Fourth Edition | 1998 | 7,500 Copies |
| | Total | [illegible]00 Copies |





தமிழாக்கம்: T. சேஷாத்ரி, M.A.,





கிடைக்குமிடம்:

**GOPAL SEVA TRUST**
80, MOSIKEERANAR STREET
BHAGAVATGITA NAGAR, ERODE—638003, (T.N.)
© (0424) 213976, Fax No.(0424) 213274

வெளியிடுபவர்: கோவிந்தபவன் காரியாலயம்,
கீதா பிரஸ், கோரக்புர். (உ.பி.)

பதிப்பாளர்: கீதா பிரஸ், கோரக்புர் - 273 005.

423

10-1

ஸ்ரீ ஹரி:

# பணிவான வேண்டுகோள்

தற்போது "கர்மத்தைப்" பற்றிய பல பிரமைகள், தவறான குழப்பங்கள் மக்களிடையே பரவியிருக்கின்றன. எனவே இன்றைய காலகட்டத்தில் அவற்றைப் பற்றிய உண்மைகளைப் புரிந்து கொள்ள வேண்டிய தேவை மிக இருக்கிறது. நமது பெரு மதிப்புக்குரிய ஸ்ரீராமஸுகதாஸ் ஸ்வாமி மஹராஜ் அவர்கள் ஸ்ரீமத் பகவத் கீதையின் "ஸாதக ஸஞ்ஜீவினி" என்ற ஹிந்தி உரையில் பின்வரும் இரண்டு பொருள்களைப் பற்றியும் மிக அழகிய முறையில் எளிதாகப் புரியும்படி, ஆய்ந்து விளக்கியிருக்கிறார்கள். அதைத்தான் நாம் தனியாக இச்சிறு புத்தகத்தின் வாயிலாக வெளியிட்டிருக்கிறோம். ஒவ்வொரு சகோதரனும், சகோதரியும் இப்புத்தகத்தை தானும் படித்து, மற்றவரையும் படிக்கத் தூண்ட வேண்டும். இந்நூலைப் படிப்பதனால் கர்மம், வருணதர்மம் இரண்டையும் பற்றிய அநேக சந்தேஹங்களும் நீங்கித் தெளிவு பெற இயலும்.

- வெளியீட்டாளர்.

## கர்ம - ரஹஸ்யம்.... ..

மேலே கர்மம் என்று எழுதியிருக்கிறோம். இது வடமொழியில் எழுதுகின்ற முறை. தமிழில் கருமம் என்று எழுத வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். ஆனால் கலைச்சொற்களைப் பயன்படுத்த நேரும்போது அதுவும் சமயக்கருத்துக்களை எழுதும்போது மூலமொழியில் உள்ள சொற்களையே, அங்கே எழுதப்படும் விதத்திலேயே பயன்படுத்துவது கருத்துக்கு ஒரு தெளிவைத்தரும் என்றும் கருதுகிறோம். ஒரே மொழியிலுள்ள சொற்களாயிருந்தாலும் கூட, சொற்களுக்குப் பொருள் கொள்ளும்பொழுது சில சமயங்களில் தெளிவான கட்டுப்பட்ட பொருள்களாய் இல்லாமல் சற்று மாறுபட்ட கருத்துக்களையும் கொள்ள இடம் கொடுக்கின்றன. எனவே நாம் பயன்படுத்தும் சொல்லை வரையறுத்த முறையில் பொருள் கொள்ள ஏதுவாக, சொல்லின் அமைப்பைச் சொல்லி பொருளையும் உறுதிபடக் கூறிவிட வேண்டும். இந்த நிலையில் நாம் நம்முடைய மொழிபெயர்ப்பில் வடமொழிச் சொற்களையே அடிப்படைச் சொற்களாகப் பயன்படுத்தப் போகிறோம். முதலில் தேவையான இடங்களில் தமிழ் மொழிபெயர்ப்பையோ அல்லது தமிழில் பழகிவரும் சொற்களையோ எடுத்துக்காட்டுவோம்.

மற்றொரு கருத்து: நாம் மொழிபெயர்ப்பு என்று சாதாரணமாகச் சொல்லும் பொழுது அதன் நீளம், அகலம், ஆழம், உயரம் முழுவதையும் மனதில் கருதித் திட்டமாக எதைச் செய்கிறோம் என்று சொல்ல முடிவதில்லை. மொழிபெயர்ப்பு என்ற கருத்தில் வெறும் சொல்லுக்கு சொல்லாகவோ, வாக்கியத்திற்கு வாக்கியமாகவோ மாற்றம் செய்யப்படுவது மட்டும் போதாது. உண்மையில் அது மொழி மாற்றமாக இல்லாமல், பொருள் பெயர்ப்பாக இருந்தால் தான் தெளிவுபடும். அதனால் தான் மொழிபெயர்ப்பைச் சிறந்த அறிஞர்கள் வரவேற்பதில்லை. இருப்பினும் வேறு வழியின்றி மொழிபெயர்ப்புக்களைச் செய்து கொண்டிருக்கிறோம். இந்த மொழிபெயர்ப்பில் நாம் கூடிய வரை கருத்துப்பெயர்ப்பாகவே செய்யப் போகிறோம்.

இப்பொழுது நாம் பொதுவாக கர்மம், கர்மம் என்று பேசுகிறோமே, தமிழில் வினை என்று சொல்லுகிறோமே இதன் உண்மையான பொருளையும், அது எந்த வரையறைக்கு உட்பட்டது என்பதையும் தெரிந்துகொள்ள முயலுகிறோம். (ரஹஸ்யம்) என்ற சொல் தமிழிற்குப் புதிது அல்ல. ஆனால் அதை இரகசியம் என்று எழுத வேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். நாம் ஏற்கனவே சொல்லி வந்தபடி வடமொழி அமைப்பை ஒட்டியே எழுதுகிறோம். ரஹஸ்யம் என்றால் மறைந்திருக்கும் உண்மை, நாடிக் கண்டு கொள்ள வேண்டிய உண்மை என்று பொருள். மேல் எழுந்தவாரியாக நாம் கொள்ளும் பொருள் போதாது. தமிழிலே

கூட செயல் என்றும், வினை என்றும் இரண்டு சொற்கள் உண்டு. சில இடங்களில் இரண்டிற்கும் பொருள் மயக்கம் ஏற்பட்டாலும் கூட வினை வேறு, செயல் வேறு. ஒரு வகையில் செயல்களின் பதிவே அல்லது செயல் தொகுதிகளின் பதிவே வினையாகும். இந்த மாறுபாட்டை வட மொழியில் கர்மம், கிரியை இந்த இரண்டு சொற்களின் மூலம் தெளிவுப்படுத்துகிறோம். இந்த "கிரியை" என்ற சொல்லுக்கும் இரண்டு பொருள்கள் உண்டு.

மேலே போகப்போக இவ்வளவு விவரங்களைச் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. எனவே எந்தச் சொல்லைப் படித்தாலும் அந்தச் சொல்லுக்கு அதாவது கலைச் சொல்லுக்கு இந்த நூலில் கொடுக்கப்பட்டிருக்கிற பொருளைத் தெளிவுபடுத்திக் கொள்ளுங்கள். அப்போது தான் இந்தக் கருத்துக்களின் நுண்மை புலனாகும். சமயக்கருத்து அறிவு நிலையில் நின்றுவிடாமல் உணர்வு மயமாக மாற வேண்டும். அதனால் இந்த முன்னுரை தேவைய்யாயிற்று.

இனி மேலே விஷயத்திற்கு வருவோம்.

'புருஷன்', பிரகிருதி [ப்ரக்ருதி] என்று இரண்டு உண்டு. இவைகளில் புருஷனிடத்தில் ஒரு மாறுபாடும் ஏற்படாது. ஆனால் இதற்கு நேர்மாறாக பிரகிருதி, மாற்றம் இல்லாமல் ஒரு பொழுதும் இருக்க முடியாது. எப்பொழுது இந்த புருஷன் பிரகிருதி யிடம் நெருங்கிய உறவை ஏற்படுத்திக் கொள்ளுகிறானோ அப் பொழுது பிரகிருதியினுடைய [செயல்] - பிரகிருதியினுடைய கிரியை - [இதை க்ரியா என்றும் வடமொழியில் எழுதுவோம்] புருஷனுடைய 'கர்மம்' ஆகிறது. ஏனென்றால் பிரகிருதியோடு புருஷன் உறவு ஏற்படுத்திக் கொண்ட உடன் அவர்களிடையே 'தாதாத்மியம்' ஏற்பட்டுவிடுகிறது. அதாவது இரண்டும் தனித் தன்மையை விட்டு ஒன்றாகி இருக்கும் நிலை அடைகின்றன. "தாதாத்மியம்" ஏற்பட்டு விடுவதனால் இயற்கையில் கிடைக்கும் பொருள்களுடன் ஒரு மமதை ஏற்படுகிறது. இந்த மமதை என்ற சொல்லுக்கு ஆசை அல்லது பற்று என்று பொருள். அந்த மமதை யின் காரணமாகக் கிடைக்காத பொருள்களுக்கு ஒரு ஆவல் ஏற்படுகிறது. இந்த ஆவலை 'காமனா' என்கிறோம். இந்த விதமாக [ஆவல்] காமனா, மமதை, தாதாத்மியம் இம்மூன்றும் சேர்ந்திருக்கும் பொழுது எந்தெந்த மாற்றம் பெறுகிற கிரியைகள் அல்லது செயல்கள் நடக்கின்றனவோ அவைகளின் பெயர் கர்மம் ஆகும்.

தாதாத்மியம் விட்டுப் போனால் இந்த கர்மம் புருஷனுக்கு 'அகர்மம்' ஆகிறது, அதாவது அந்த கர்மம் [புருஷன் சம்பந்தம்

இல்லாத காரணத்தால்] கேவலம் கிரியையாகவே நின்றுவிடுகி றது. அதில் பயனைக் கொடுக்கக் கூடிய ஆற்றல் இருக்காது. அகர்ம நிலையில் அதாவது 'சொரூபத்தின்' அநுபவமாகவே மாறி நிற்கும் போது அந்த மகாபுருஷனுடைய உடலின் மூலமாக செய்யப்படும் செயல்கள் எல்லாம் அகர்மத்தின் கர்மம் என்று சொல்லப் படுகின்றன.

**கர்மணி அகர்ம ய: பச்யேத் அகர்மணி ச கர்ம ய:**
**ஸ புத்திமான் மனுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ந கர்மக்ருத்**
**[கீதை 4-18]**

இதை விளக்கமாகச் சொல்லப் போனால் பற்றற்ற சொரூப நிலை அநுபவம் இல்லாத போதும் கூட உண்மையில் எல்லா கிரியை களுமே பிரகிருதி, அதன் காரிய சரீரத்தாலேயே செய்யப்படுகின் றன. ஆனால் பிரகிருதி அல்லது உடலில் இருந்து தன் தனித்தன் மையை உணராதபோது அந்த கிரியைகள் கர்மங்கள் ஆகின்றன.

**ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வச:**
**அஹங்கார விமூடாத்மா கர்தாஹமிதி மந்யதே**
**[கீதை 3 - 27]**

**ப்ர க்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணாநி ஸர்வச.**
**ய: பச்யதி ததாத்மானம் அகர்(த்)தாரம் ஸ பச்யதி**
**[கீதை 13-29]**

கர்மம் மூன்று வகைப்படும் :- 1. க்ரியமாண கர்மம் [நிகழும் நிலையிலுள்ள கர்மம்], 2. ஸஞ்சித கர்மம், 3. ப்ராரப்தம். இப் பொழுது நிகழ்காலத்தில் செய்யப்பட்டுக் கொண்டிருக்கின்ற கர்மங்களை க்ரியமாண அல்லது நிகழ் நிலையில் உள்ள கர்மம் என்று சொல்லுகிறோம்.

கீதை அத்: 4-12, 15-2 சுலோகங்களின் பொருள் : புதிய செயல் கள், அவற்றின் பயனாக ஏற்படும் ஸம்ஸ்காரங்கள் எல்லாமே மனிதப்பிறவிகளிலேயே ஏற்படுகின்றன. பறவைகள், மிருகங்கள் சாதியில் ஏற்படா. ஏன் எனின் அவை வினைப்பயனைத் துய்ப்ப தற்காகவே ஏற்பட்ட யோனிகள் (பிறவிகள்).

இப்பொழுதைக்கு முன் இந்த பிறவியிலோ அல்லது சென்ற அநேகம் மனிதப் பிறவிகளிலோ செய்யப்பட்ட கர்மங்கள் சேர்ந்து இருக்கும் தொகுதியை ஸஞ்சித கர்மம் என்று சொல்லுகிறோம். இந்த ஸஞ்சித கர்மத்தில் பயனை கொடுக்கும் முளைப்பு நிலை யில் உள்ளவற்றை ப்ராரப்த கர்மம் என்று சொல்லுகிறோம். இவை பிறவி, வயது, அனுகூல - பிரதி கூலமான சூழ்நிலைகளின் உருவத்தில் பயனாக மாறுவதற்கு ஏற்ற நிலையில் இருக்கும்.

## க்ரியமாண [நிகழ் நிலை]




நிகழ்நிலை கர்மங்கள் (கருமாக்கள்) இரண்டு வகைப்படும். அவை சுபமான அல்லது அசுபமானவை. ஸாஸ்திர நூல் களில் விதித்தபடி, விதித்த முறைகளைக் கொண்டு செய்யப்படு கின்ற கர்மங்கள் சுபகர்மங்கள் என்று சொல்லப்படுகின்றன. ஆனால் காமம் (ஆசை), குரோதம் (கோபம்), லோபம் (பேராசை), ஆஸக்தி (குருட்டுப்பற்று) முதலியவைகளால் தூண்டப்பட்டு, ஸாஸ்திரம் "கூடாது" என்று சொல்லுகின்ற செயல்கள் செய்யப்படும்பொழுது அவை அசுபகர்மங்கள் என்று சொல்லப் படுகின்றன.

சுபமோ, அசுபமோ நிகழ்நிலை கர்மத்துக்கு இரண்டு வகை விளைவுகள் உண்டு. ஒன்று பயன்பகுதி. மற்றொன்று ஸம்ஸ்காரப் பகுதியின் பால்படும். ஸம்ஸ்காரம் என்றால் மீண்டும், மீண்டும் ஒரு செயலைச் செய்வதினால் அல்லது ஒரு வகையான (சுப அல்லது அசுப) செயலைச் செய்வதினால் மனதில் ஏற்படுகிற செயல் 'போக்குப் பதிவாகும்'. இவ்விரண்டும் தனித்தனியா னவை, மாறுபட்டவை.

நிகழ்நிலை கருமத்தின் பயன் அம்சத்தில் இரண்டு பேதங்கள் உண்டு ஒன்று திருஷ்டமாகும், அதாவது தோற்றம் தருவதாகும். மற்றொன்று அதிருஷ்டம், அதாவது தோற்றத்திற்குள் வராதது. இவற்றில் திருஷ்டத்திலும் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று

தாற்காலிகமானது, அதாவது உடன் நிகழ்வது. காலாந்தரிகம்: அதாவது பின்னால் கால இடைவெளிக்குப் பிறகு ஏற்படுவது. இதை விளக்கப் பின்வரும் எடுத்துக்காட்டைப் பார்ப்போம். உணவு உண்ணும் பொழுது ஏற்படுகின்ற சுவை அல்லது இன்ப உணர்வு உடன் கிடைக்கும் பயனாகும். ஆனால் உணவின் பயனாக வயது, ஆற்றல், உடல்நலம் முதலியவை அதிகரிக்கின் றனவே அது திருஷ்டத்தின் பின் விளைவு ஆகும்; காலாந்தரத் தில் ஏற்படுவது. இவ்விதமே காரம் அதிகமாக சாப்பிடுகின்ற சுபாவம் உள்ளவன் அதிக காரமுள்ள பண்டங்களைச் சாப்பிட் டுத் திருப்தி அடைகிறான், இன்பமுறுகிறான். அப்போது காரத் தின் காரணமாக நாக்கில் எரிச்சல், கண்களில் இருந்தும், மூக்கி லிருந்தும் நீர்வடிதல், தலையில் வேர்வை இவையெல்லாம் தோற்றம் தரும் தாற்காலிகப் பயனாகும். தவறான உணவு முறை யின் விளைவாக வயிற்றில் எரிச்சல், வலி, வியாதி ஏற்படுகின் றன. அவை திருஷ்டத்தின் காலாந்தரப் பயனாகும்.

இந்த விதமாகவே அதிருஷ்டத்திலும் இரண்டு பேதங்கள் உண்டு. அவை லௌகிகம், பாரலௌகிகம். வாழும் பொழுதே நற்பயனை வேண்டி வேள்வி, தானம், தவம், தீர்த்தயாத்திரை, விரதம், மந்த்ரஜபம் ஆகிய சுபகர்மாக்களை ஸாஸ்திர முறைப்படி செய்தோமானால், இதற்கு பிரதிபந்தகமான [இடையூறு விளை விக்கக் கூடிய] நிகழ்ச்சிகள் ஒன்றும் இல்லாது போனால், இங்கேயே புத்திரன், தனம், கீர்த்தி, பெருமை ஆகிய அனுகூலங் கள் கிடைக்கும். மேலும் வியாதி, வறுமை முதலிய பிரதிகூலங் கள் நிவர்த்தியாகும். இது அதிருஷ்டத்தின் லௌகிக பலனாகும்.

இங்கே திருஷ்டத்தின் காலாந்தரப் பயனும், அதிருஷ்டத்தின் லௌகிகப் பயனும் ஒரே மாதிரி இருப்பதாகத் தோன்றுகின்றன. ஆனால் அவை வேறு, வேறு. காலாந்தர பலன் நேரே, உடனே கிடைக்கிறது. ப்ராரப்தம் ஆகிக் கிடைப்பதில்லை. ஆனால் அதிருஷ்ட லௌகிகப் பயன் ப்ராரப்தம் ஆகியே கிடைக்கிறது.

இறந்த பிறகு சொர்க்கம் கிடைக்க வேண்டும் என்று விரும்பி விதி முறைப்படி ஈடுபாடு, நம்பிக்கை கொண்டு வேள்வி, தானம், தவம் முதலிய நற்கருமாக்கள் செய்யப்பட்டால் இறந்த பிறகு சொர்க்கம் முதலிய மேல் உலகங்கள் பெறலாம். இது அதிருஷ்டத் தின் பாரலௌகிகப் [மேல் உலக] பயனாகும். இவ்விதமே திருடு தல், கொள்ளை, கொலை புரிதல் முதலிய தீய செயல்களுக்கு லௌகிகப் பயனாக சிறை, அபராதம், தூக்குத்தண்டனை முதலி யன கிடைக்கும். இது அதிருஷ்டத்தின் லௌகிகப் பயனாகும்.

பாவங்களின் பயனாக இறந்த பிறகு நரகவாசம் அல்லது பறவை, மிருகங்கள், புழு பூச்சிகளாகப் பிறவி எடுத்தல் இவையெல்லாம் அதிருஷ்டத்தின் பாரலௌகிகப் பயன்கள்.

பாவம், புண்ணியம் என்ற இவற்றின் லௌகிக, பாரலௌகிகப் பயன்களின் விஷயத்தில் ஒரு கருத்தை தெரிந்து கொள்ள வேண்டும். எந்த பாவ கர்மங்களின் பயனாக கைது, அபராதம், பழி முதலியவற்றின் உருவத்தில் தண்டனை அநுபவிக்கப்படுகிறதோ அவற்றிற்கு இறந்த பிறகும் பயன் அநுபவிக்க வேண்டிய நிலை ஏற்படாது என்றாலும் மனிதன் செய்த பாவத்தின் அளவு எவ்வளவு? அதன் பயனை முழுவதுமாக அநுபவித்து விட்டானா? அல்லது ஒரு பகுதி தான் அநுபவித்தானா? அநுபவித்த பகுதி எவ்வளவு? மிச்சம் எவ்வளவு? என்றெல்லாம் தெரிந்து கொள்வதற்கு மனிதனிடம் அளவுகோலோ, திறமையோ கிடையாது. ஆனால் பகவானுக்கு முழுமையாக எல்லாம் தெரியும். எனவே அவர் இட்ட கட்டளையின்படி பாவங்களின் எந்த அம்சம் அநுபவிக்கப்படவில்லையோ அதை இந்தப் பிறவியிலோ அல்லது இறந்த பிறகோ அநுபவித்தே ஆக வேண்டும். எனவே மனிதன், "நான் செய்த பாவம் குறைவு அல்லது பாவமே செய்யவில்லை! எனக்கு ஏன் அதிக தண்டனை? என்று கேள்வி கேட்பதில் பொருள் இல்லை. ஏனென்றால் சர்வக்ஞனான [எல்லாமறிந்த] பகவான் எல்லோருக்கும் நண்பன். பேராற்றல் படைத்தவன். அவருடைய நியாயத்தில் பாவத்திற்கு மீறிய தண்டனை யாருக்கும் கிடைக்காது. எனவே கிடைத்த தண்டனை ஏதோ முன்னால் செய்த பாவத்திற்கு உரிய தண்டனைதான் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

இங்கே நான் கேள்விப்பட்ட ஒரு நிகழ்ச்சி நினைவிற்கு வருகிறது. ஒரு கிராமத்தில் ஒரு நல்லவர் வசித்து வந்தார். அவருடைய வீட்டிற்கு எதிரே ஒரு பொற்கொல்லனுடைய வீடு இருந்தது. அவனிடம் நிரம்ப தங்கம் வந்து கொண்டிருந்தது. அதைக் கட்டியாக மாற்றிக் கொடுத்துக் கொண்டிருந்தான். அதற்கு அவனுக்குப் பணம் கிடைத்து வந்தது. ஒரு நாள் அவனிடத்தில் அதிக தங்கம் சேர்ந்து விட்டது. இரவில் காவல் புரியும் வீரனுக்கு அது தெரிந்து விட்டது. அவன் அந்த பொற்கொல்லனை இரவோடு இரவாகக் கொன்று விட்டு, தங்கம் வைத்திருந்த பெட்டியை தூக்கிக் கொண்டு போய்விட்டான். இதனிடையே எதிர்வீட்டில் இருந்த நல்லவர் சிறுநீர் கழிக்க எழுந்து வெளியே வந்தார். அவர் அந்தக் காவலாளியைப் பிடித்து விட்டார். இந்தப் பெட்டியில் என்ன கொண்டு போகிறாய் என்று கேட்டார். அந்த

ஆள், 'நீ சும்மா இரு சத்தம் போடாதே' இதில் இருப்பதை நாம் இருவரும் பிரித்துக் கொள்வோம் என்றான். நல்லவர், "நான் என்ன திருடனா" என்று கேட்டார். பாராக்காரன், "இதோ பார்! உண்மையைப் புரிந்து கொள்; நான் சொல்லுவதைக் கேள், இல்லை என்றால் தொல்லை தான்" என்று அச்சுறுத்தினான். நல்லவர் அஞ்சவில்லை. அந்த ஆள் பெட்டியைக் கீழே வைத்து விட்டு அவரைப் பிடித்துக் கொண்டு தன்னுடைய ஊதுகுழலை எடுத்து ஊதினான். அந்தச் சத்தத்தைக் கேட்டவுடன் மற்ற இடங்களின் பாராக்காரர்களும் ஓடி வந்தார்கள். முதல் வீரன் மற்றவர்களிடம், "இந்த ஆள் இந்த வீட்டிலிருந்து பெட்டியை எடுத்துக் கொண்டு வந்திருக்கிறான். இவனை நான் பிடித்து இருக்கிறேன்" என்றான். வீரர்கள் உள்ளே சென்றார்கள். பொற் கொல்லன் இறந்து கிடந்தான். அந்தப் பாராக்காரர்கள் அந்த நல்லவரைப் பிடித்து அரசு அலுவலர்களிடம் ஒப்படைத்து விட்டார்கள். வழக்கு நீதிபதியிடம் வந்தது. நல்லவர், "நான் கொல்லவில்லை, இந்தக் காவல்காரன் தான் கொன்று விட்டான்" என்றார். ஆனால் அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து, "இவர் சொல்லுவது பொய்; நாங்களே இவரை இரவில் பிடித்தோம்" என்று சொல்லிவிட்டார்கள்.

வழக்கு நடந்தது. வழக்கின் முடிவில் அவருக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. அதைக் கேட்டு அவர் அலறினார். "ஐயோ இது என்ன அநியாயம்! இந்த பகவானுடைய ஆட்சியில் நியாயத்திற்கு இடமில்லையா? கொல்லாத நான் தண்டனையை அநுபவிக்க, கொன்ற இவன் ஒரு சங்கடமும் இல்லாமல் தப்பிக் கிறானே" நீதிபதியின் மனதில் அவ்வார்த்தைகள் ஒரு சலனத்தை ஏற்படுத்தின. "இவர் உண்மையே சொல்வதாகத் தெரிகிறது. இதைத் தீர விசாரித்து விடவேண்டும்", என்று எண்ணிய அவர் ஒரு உபாயம் செய்தார்.

காலை ஆனவுடன் ஒரு மனிதன் அழுது கொண்டே வந்து, என்னுடைய சகோதரனை யாரோ கொன்று விட்டார்கள், விசா ரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். நீதிபதி அதே வீரனையும் கைதியாய் இருந்த நல்லவரையும் அந்தப் பிணத்தை எடுத்து வர அனுப்பினார். இருவரும் அந்த மனிதனுடன் பிணம் கிடந்த இடத்திற்குச் சென்றார்கள். அங்கே கட்டிலின் மேல் துணியால் மூடப்பட்டுப் பிணம் கிடந்தது. அங்கும், இங்கும் இரத்தம் சிதறியிருந்தது. அந்த இருவரும் கட்டிலுடன் பிணத்தை எடுத்துக் கொண்டு போகத் தொடங்கினார்கள். அந்த மனிதனோ, "முன்னால் போய்ச் சொல்லுகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்று விட்டான். மற்ற இருவரும் கட்டிலுடன் போகும்பொழுதே

அந்த வீரன் அந்த நல்லவரிடம் சொன்னான்:- "இதோ பார் அன்று நான் சொன்னதை நீ கேட்டிருந்தால் பொன்னும் கிடைத்திருக்கும், தூக்குத் தண்டனையும் கிட்டி இருக்காது. உண்மையின் பயனைப் பார்த்தாயா?". கைதி சொன்னார்:- "நான் உண்மையாக நடந்து கொண்டேன். தூக்குத் தண்டனை என்னவோ கிடைத்துவிட்டது. கொலை செய்தது நீ, தண்டனை பெற்றது நான். இந்த பகவான் அரசாங்கத்தில் நியாயத்திற்கு இடமில்லை!"

கட்டிலின் மேல் இருந்தது உண்மையான பிணம் அல்ல. அதில் ஒரு மனிதன் படுத்திருந்தான். அவன் இந்த வார்த்தை களைக் கேட்டுத் தன்னிடம் இருந்த ஒரு காகிதத்தில் இவர்கள் பேச்சை அப்படியே எழுதிக் கொண்டான். கட்டில் நீதிபதிக்கு எதிரே வந்தது. இறக்கி வைக்கப்பட்டது. துணியை உதறிவிட்டு அந்த மனிதன் எழுந்தான். நீதிபதியிடம் எல்லாவற்றையும் சொல்லிவிட்டான். நீதிபதி இதைக் கேட்டு வியப்படைந்தார். கொலை செய்த வீரன் திடுக்கிட்டு நின்றான். அவன் விசார ணைக்காகச் சிறையில் அடைக்கப்பட்டான்.

நீதிபதிக்கு மனதில் ஏதோ உறுத்தல் இருந்தது. அவர் கைதி யான நல்லவரைத் தனியே கூப்பிட்டு, "உன்னை நான் குற்றமற்ற வனாகவே கருதுகிறேன். ஆனால் உண்மையைச் சொல்லிவிடு. இந்தப் பிறவியில் வேறு ஏதாவது கொலை செய்தது உண்டா?" என்று கேட்டார். அதற்கு அவர் சொன்ன விடை இது.

"ஒரு கயவன் இருந்தான். அவன் திருட்டுத்தனமாக என் மனைவியிடம் வந்து கொண்டிருந்தான். நான் சொல்லிப் பார்த் தேன். அவன் கேட்டதாக இல்லை. ஒரு இரவு நான் வீட்டிற்கு வந்தபோது அவனை அங்கே பார்த்தேன். கோபம் கொண்ட நான் அவன் தலையை வெட்டி வீட்டிற்குப் பின்னால் உள்ள ஆற்றில் எறிந்து விட்டேன். இது யாருக்கும் தெரியாது. அவன் சொல் வதைக் கேட்ட நீதிபதி பின்வருமாறு சொன்னார். "உனக்கு கிடைத்த தூக்குத்தண்டனை உறுதி! ஏன் என்றால் நான் இது வரையில், லஞ்சம் வாங்குவது, வேறு தவறு இழைத்தல் முதலிய எந்த நியாய விரோதமான செயலையும் செய்ததில்லை. பிறகு தூய மனதுள்ள நான் தவறாக எப்படித் தீர்ப்பளிக்க முடியும்? என் கை உனக்குரிய தண்டனையைத் தான் தீர்ப்பாக எழுதியிருக்கி றது. இப்பொழுது என் மனம் சந்தோஷமாக இருக்கிறது. அந்த பாவத்தின் தண்டனையை நீ அநுபவி, இந்தக் கொலையின் தண்டனையை அவன் அநுபவிப்பான்" என்றார்.

[அந்த நல்லவன் திருடனை கண்டுபிடித்துக் கொடுத்து தன்னுடைய கடமையைத்தான் செய்தான். ஆனால் அவனுக்குக் கிடைத்த அந்த தண்டனை கடமை செய்ததற்குக் கிட்டிய பல னல்ல. ஆனால் வெகுநாள் முன்பு நடத்திய கொலைக்கு இன்று கிடைத்த தண்டனை. கடமையைச் செய்ததினால் கிடைத்த பயன் என்னவென்றால் இகலோகத்தில் தண்டனை கிடைத்தா லும், பரலோகத்தில் தண்டனையில் இருந்து விடுபட்டு விடு வான். ஏனென்றால் பாவத்தின் பயன் இங்கேயே துய்க்கப்பட்டு விட்டது. இங்கே கிடைத்தது பரலோகத்தில் கிடைக்கப்போகின்ற மனநிறைவுக்கு எதிரே, பயங்கரத் தண்டனையில் இருந்து விடுபடுகின்ற மகிழ்ச்சிக்கு எதிரே இந்தச் சிறிய தண்டனை மிகவும் குறைவு. இந்த குறைந்த கஷ்டத்தால் பரலோகத்தில் பெரிய நன்மை கிடைக்கிறது.]

இந்த கதையிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவென் றால், எப்போது செய்கின்ற பாவத்தின் தண்டனை எப்போது வந்து சேரும் என்று சொல்ல முடியாது. பகவானின் நியாயம் விழங்கும் முறை விசித்திரமானது. பழைய புண்ணியம் வலிவாக இருந்தால் பாவத்தின் பயன் கூட உடனே கிடைப்பதில்லை. புண்ணியம் முழுமையாகக் கரைந்த பிறகு பாவம் தலையைத் தூக்கும். எனவே பாவத்தின் தண்டனையை இந்தப் பிறவி யிலேயோ அல்லது வேறு மறுபிறவியிலேயோ அநுபவித்தே ஆக வேண்டும்.

**அவச்யமேவ போக்தவ்யம் க்ருதம் கர்ம சுபாசுபம்**
**நாபுக்தம் க்ஷீயதே கர்ம ஜன்ம கோடி சதைரபி**

இதன் பொருள் : செய்யப்பட்ட நல்ல, கெட்ட கர்மாக்களின் பயன் கண்டிப்பாக அநுபவிக்கப்பட வேண்டும். நூறு கோடிப் பிறவி களானாலும் அநுபவிக்கப்படாத கர்மம் அழிவதில்லை.

இதுவரை பாவ கர்மாக்களின் பயன் கிடைக்கும் முறையைப் பற்றிப் பேசினோம். இதே விதமாக சொத்து, சுகம், மானம், மரியாதை, புகழ், நோயின்மை முதலிய அநுகூலமான நிலைக ளின் உருவத்தில் புண்ணிய கர்மாக்களின் எந்த அம்சத்தின் பயன்கள் அநுபவிக்கப்பட்டனவோ அந்தப் பகுதி கரைந்து போகும். ஆனால் எவ்வளவு மிச்சம் இருக்கிறதோ அதை பர லோகத்தில் அநுபவித்துக் கொள்ளலாம். புண்ணிய கர்மாக்களின் முழுப் பயனும் இங்கே அநுபவித்து விட்டோமானால், புண்ணி யமும் இங்கேயே முடிந்து விடும்.

க்ரியமாண கர்மாக்களின் [நிகழ்நிலை வினைகளின்] ஸம்ஸ்காரப் பகுதிக்கும் இரண்டு பேதங்கள் உண்டு. 1. சுத்தமான அல்லது தூய ஸம்ஸ்காரம், 2. அசுத்தமான அல்லது தீய ஸம்ஸ்காரம். ஸாஸ்த்ரம் விதித்த கர்மாக்களைச் செய்வதினால் ஏற்படுகின்ற ஸம்ஸ்காரங்கள் சுத்தமானவை, தூயவை. ஸாஸ்தி ரங்கள், நீதி, உலக மரியாதை இவைகட்கு எதிராகச் செய்யப்படும் கர்மாக்களினால் ஏற்படும் ஸம்ஸ்காரங்கள் அசுத்தமானவை, தூய்மையற்றவை.

இந்த இரு வகை கர்மாக்களினால் ஏற்படுகின்ற ஸம்ஸ்காரங் களே சுபாவமாகின்றன. அதாவது மனிதன் இயற்கையாக செயல் படும் தன்மையாகின்றன. அவற்றில் அசுத்தப் பகுதியை முற்றிலு மாக அழித்துவிட்டோமானால் தன்மை சுத்தமானதாக, கறையற் றதாக, பவித்திரமானதாக அல்லது தூயதாக ஆகிறது. ஆனாலும் ஏற்கனவே செய்துவிட்ட கர்மாக்களின் காரணமாக ஏற்பட்டிருக் கிற தன்மை, அந்த கர்மங்களின் வித்தியாசத்தின் காரணமாக ஜீவன் முத்தரான மனிதர்களின் சுபாவத்திலும் மாறுபாடு ஏற்படு கிறது. இந்த சுபாவத்தின் மாறுபாட்டின் காரணமாக அவர்கள் மூலமாகவும் மாறுபட்ட கர்மங்கள் நிகழ்ந்து விடுகின்றன. ஆனால் அவை குற்றம், குறை கொண்டவையாக இருப்பதில்லை. ஆனால் முற்றிலும் சுத்தமாக இருக்கின்றன. அவைகளினால் உலகுக்கு நன்மையே ஏற்படுகிறது. ஸம்ஸ்காரப் பகுதியினால் எந்த சுபாவம் அல்லது தன்மை ஏற்படுகிறதோ அது ஒரு வகை யில் பார்த்தால் மிகவும் பலம் பொருந்தியதாக இருக்கிறது.

"ஸ்வபாவோ மூர்த்னி வர்த்ததே" [சுபாவம் பலம் பொருந்தி யதாக இருக்கிறது]. எனவே அதை அழிக்க முடியாது. பின்வரும் சுலோகத்தைப் பாருங்கள்.

**'வ்யாக்ரஸ் துஷ்யதி கானனே ஸுகஹநாம்**
**ஸிம்ஹோ குஹாம் ஸேவதே**
**ஹம்ஸோ வாஞ்சதி பத்மிநீம் குஸுமிதாம்**
**க்ருத்ர: ஸ்மசானே ஸ்த்தலே**
**ஸாது: ஸத்க்ருதி ஸாதுமேவ பஜதே**
**நீசோபி நீசம் ஜனம்**
**யா யஸ்ய ப்ரக்ருதி: ஸ்வபாவ ஜநிதா**
**கேநாபி நத்யஜ்யதே'**

இதன் பொருள்: புலி அடர்ந்த காடுகளில் ஆனந்தமாய் இருக்கி றது. சிங்கம் ஆழ்ந்த குகையைத் தேடுகிறது. அன்னம் மலர்ந்த தாமரையை விரும்புகிறது. கழுகு மயானத்தில் இருக்க ஆசைப் படுகிறது. நல்லவன் நல்ல நடத்தையுள்ள நல்லவர்களுடன் வாழ

விரும்புகிறான். கீழோன் கீழ்ப்பட்டவர்களுடன் சேருகிறான். உண்மை தான், சுபாவத்தின் காரணமாக ஏற்பட்ட பிரகிருதி அல்லது பழக்கத்தை யாரும் விட முடிவதில்லை.

இவ்விதமாக பிராமணர்கள், க்ஷத்திரியர்கள் முதலிய வருணத்தார்களின் இயற்கைத் தன்மை அவர்கள் செய்கின்ற செயல்களின் முக்கியப்பங்கு வகிக்கிறது. இதனால் தான் பகவான் அர்ஜுனனிடம், 'நீ மோகம் காரணமாக எந்தச் செயலைச் செய்ய மறுக்கிறாயோ அதே செயலை உன்னுடைய இயற்கைச் செயல் தன்மையினால் தூண்டப்பட்டு, தடுக்க முடியாமல் செய்து விடுவாய்' [கீதை 18,/60] என்றான்.

இதில் சிந்திக்க வேண்டிய செய்தி ஒன்று இருக்கிறது. ஒரு புறம் சுபாவத்தின் ஆற்றல் மிக அதிகம். அதை யாரும் விட முடியாது. மறுபக்கம் மனிதப்பிறவியின் முயற்சிகளுக்கும் அபார ஆற்றலுண்டு. மனிதன் எதைச் செய்யவும் சுதந்திரமுள்ளவனாக இருக்கிறான். இப்போது கேள்வி என்னவென்றால் இந்த இரண்டில் எது வெற்றி அடையும், எது தோல்வி அடையும்? [சுபாவமா, முயற்சியா?]

இதில் வெற்றி, தோல்வி என்ற பேச்சுக்கே இடமில்லை. அதனதன் இடத்தில் இரண்டுமே வலிவானவை. இங்கே சுபாவத்தை விடமுடியாது என்று சொல்லுவது ஜாதி மாத்திரத்தின் சுபாவமாகும். அதாவது உயிர் எந்த வருணத்தில் பிறந்திருக்கிறதோ, அதற்கேற்றவாறு அமைந்த சுபாவம் மாற்றப்பட முடியாதது. ஆகவே அந்த சுபாவத்தை குறை கூற முடியாது. அது குறையற்றது. உதாரணமாக பிராமணர், க்ஷத்திரிய, வருணத்தார்களின் இயற்கையை மாற்ற முடியாது. மாற்றவும் தேவையில்லை. ஸாஸ்திரமும் மாற்றச் சொல்லவில்லை. ஆனால் இந்த சுபாவத்தின் அசுத்தப் பகுதிகளான விருப்பு, வெறுப்பு எனும் தீய அம்சத்தை அழிப்பதற்கு பகவான் மனிதனுக்குத் திறமை கொடுத்திருக்கிறார். எந்த தோஷங்களின் காரணமாக மனிதர்களுடைய சுபாவம் அசுத்தமாகியிருக்கிறதோ அந்த தோஷங்களை அழித்து மனிதன் தன் விருப்பப்படி தன் சுபாவத்தை சுத்தமாக்கிக் கொள்ள முடியும். மனிதன் முயன்றால் கர்மயோகத்தின் வாயிலாக முயற்சிகளைச் செய்வதின் மூலம் ராகத்வேஷத்தை [விருப்பு, வெறுப்பை] அழித்து சுபாவத்தை நல்லதாக ஆக்கி கொள்ளலாம்.

**இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராகத்வேஷௌ வ்யவஸ்திதௌ
தயோர் ந வசமாகச்சேத் தௌஹ்யஸ்ய பரிபந்தினௌ**
**[கீதை 3/34]**

ராகமும், துவேஷமும் இந்திரிய விஷயங்களில் இந்திரியங்களுக்கு வைக்கப்பட்டுக் கிடைக்கின்றன. அவற்றில் வசப்படாதீர்கள். அவை இதைத் திருடிவிடுபவை.

பக்தி யோகத்தின் மூலமாகவும் எப்பொழுதும் எம்பெருமானிடம் சரண்புகுந்து தன்னுடைய சுபாவத்தை மனிதன் மாற்றிக் கொள்ளலாம். சுத்தமானதாக ஆக்கிக் கொள்ளலாம். [18/62] இந்த விதமாகப் பார்த்தால் பிரகிருதியின் [சுபாவத்தின்] வலிவும் நிரூபிக்கப்படுகிறது. மனிதனின் சுதந்திரமும் நிறுவப்படுகிறது. முற்றின பொருளாக சுபாவத்தை சுத்தமாக வைத்துக் கொள்ளுவதில் பிரகிருதி முதன்மை வகிக்கிறது. அசுத்தத் தன்மையை நீக்குவதில் மனிதனுக்கு சுதந்திரமுண்டு. அந்த சுதந்திரம் அசுத்த நீக்கத்திற்கு முக்கியம்.

எப்படியென்றால் இரும்பினால் ஆன வாளை ஸ்பரிசவேதிக் கல் தொட்டால் வாள் தங்கவாள் ஆகிவிடும். ஆனால் அதன் அமைப்பு, வலிமை, வெட்டும் தன்மை இவற்றில் மாறுபாடு ஏற்படாது. இவ்விதம் தங்கமாக்குவதில் ஸ்பரிசவேதிக்கல்லுக்கு முக்கியப்பங்கு இருந்தது. ஆனால் வலிமை, கூர்மை, தோற்றம் இவற்றில் வாளின் தன்மையும் முக்கியப்பங்கு இருந்தது. எனவே எவர்கள் தங்களுடைய சுபாவத்தை முழு அளவுத் தூய்மை ஆக்கிக் கொண்டு விடுகிறார்களோ அவர்களின் கர்மாக்களும் முழுமையாக, சுத்தமாயிருக்கின்றன. சுபாவம் சுத்தமானாலும், வருணம், ஆசிரமம், ஸம்ப்ரதாயம், சாதனை முறை, நம்பிக்கைகள் இவற்றின் காரணமாக செய்கைகளில் மாறுபாடு காணப்படும். எடுத்துக்காட்டாக ஒரு பிராமணன் உண்மை தத்துவத்தைப் புரிந்து கொண்ட பிறகு உணவு, நீர் முதலியவைகளில் பவித்திரத் தன்மையை காக்க முயல்வான். தன் கையாலேயே உணவு செய்து அருந்துவான். ஆனால் ஒரு ஹரிஜனனுக்கோ அல்லது சாதாரண வருணத்தானுக்கோ தத்துவ போதம் ஏற்பட்டாலும் அவன் உணவு முதலியவற்றின் சுத்தத்தைப் பார்க்க மாட்டான். பிறர் எச்சிலையும் கூட உண்பான். ஏனென்றால் அவனுடைய சுபாவம் அப்படி அமைந்து விட்டது. ஆனால் அந்த சுபாவம் அவனுக்கு குறை உள்ளதாக இராது.

இந்த ஜீவனுக்கு 'அஸத்துடன்' [பொய்ப் பொருள்களுடன்] சம்பந்தம் ஏற்படுத்திக்கொள்ளும் சுபாவம் அநாதி காலமாகவே இருந்து வருகிறது. அதனால் தான் அவன் பிறப்பிறப்பு வட்டத்தில்

சிக்கிக் கொண்டு மாறிமாறி, உயர்ந்த, தாழ்ந்த யோனிகளில் பிறக்கிறான். அந்த சுபாவத்தை அவன் சுத்தமாக்கிக் கொள்ள முடியும். அதாவது காமனா, மமதா, தாதாத்மியம் [இச்சைகள், தனதென்னும் எண்ணம், ப்ரகிருதியிடம் ஈடுபாடு] என்ற மூன் றையும் அழித்து விட்டால் சுபாவம் சுத்தமாகிவிடும். அப்படி அவற்றிலிருந்து நீங்கிய சுபாவம் குற்றமுள்ளதாக இராது. அந்த சுபாவத்தை அழிக்க வேண்டுவதில்லை.

மனிதன் அகங்காரத்தின் பிடியை விட்டுவிட்டு முழுமையாக பகவானைச் சரணடைந்து விட்டால் அவன் சுபாவம், ஸ்பரிசவே திக்கல்பட்ட இரும்பு தங்கமாவது போல் சுத்தமாகி விடும். சுபாவம் சுத்தமான பிறகு சுபாவம் தந்த செயல்களைச் செய்யும் பொழுது அவனுக்கு குற்றமோ, பாவமோ ஏற்படுவதில்லை. [18/47] முழுமையாக பகவானைச் சரணடைந்த பக்தனுக்கு பிரகிருதியுடன் ஒரு ஒட்டுதலும் இருப்பதில்லை. அந்த பக்தனின் வாழ்வில் பகவானுடைய சுபாவமே செயல்படுகிறது. பகவான் எல்லா உயிர்களுக்கும் நண்பன். கீதை [5/29] அதனால் பக்தனும் எல்லா உயிர்களுக்கும் நேயனாகி விடுகிறான்.

ஸுஹ்ருத: ஸர்வ தேஹினாம் [பாகவதம் 3/25/21]

இந்த விதமாக கர்மயோகத்தின் கண்ணோட்டத்தில் மனிதன் ராகத்வேஷத்தை விட்டால் அப்பொழுது அவனுடைய சுபாவம் சுத்தம் அடைகிறது, வளர்கிறது, வளம் பெறுகிறது. அப்போது அவன் சுயநல எண்ணத்தை விட்டுவிட்டு உலகின் நன்மையைப் பற்றியே எண்ணுகிறான். அந்த எண்ணம் தானாகவே ஏற்பட்டு விடுகிறது. பகவானின் சுபாவம் எந்த உயிர்க்கும் நன்மை செய்வ தாகும். [ஸர்வ பூத ஹிதே ரதா: (கீதை 5/25, 12/4)] அவனுடைய செயல்கள் எல்லாம் உயிரினத்தின் நன்மைக்காக என்று ஆகும் பொழுது அவன் பகவானுடன் ஒன்றிவிடுகிறான். அதாவது எல்லா உயிருக்கும் அன்புடன் நன்மை புரியும் பேராற்றலைப் பெற்று விடுகிறான். அவனிடம் நண்பனாய் இயங்கும் ஆற்றல் செயல்படு கிறது. உள்ளபடி எல்லா உயிருக்கும் நண்பனாக இருக்கும் இந்த தெய்வ ஆற்றல் மனிதனுக்கு எளிதில் கிடைக்கக் கூடியது தான். ஆனால் அஹங்காரம், ராகத்வேஷம் இவற்றின் காரணமாக அந்த ஆற்றலுக்குத் தடை ஏற்பட்டு விடுகிறது. அந்த ஆற்றல் செயல்படுவதில்லை. மஹாபுருஷர்களிடம் தன் முனைப்பு [அஹங்காரம்] கிடையாது. விருப்பு, வெறுப்பு [ராகத்வேஷம்] கிடையாது. அதனால் அவர்களிடத்தில் இந்த நட்பாற்றல் செயல் பாடு கொள்கிறது.

## ஸஞ்சித கர்மம்




அநேக மனிதப் பிறவிகளில் எந்த கர்மங்கள் அந்த: கரணத்தில் சேர்ந்திருக்கின்றனவோ அவை ஸஞ்சித கர்மங்கள் என்று சொல்லப்படுகின்றன. அந்தத் தொகுப்பில் பயன்பகுதி, ஸம்ஸ்காரப் பகுதி இரண்டுமே இருக்கும். அவற்றில் பயன்பகுதியிலிருந்து ப்ராரப்தம் விளைகிறது. ஸம்ஸ்காரப் பகுதியிலிருந்து 'ஸ்புரணா' ஸ்புரித்தல் அல்லது முளைப்பு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. அந்த முளைப்புக்களிலும் புதிதாகச் செய்யப்பட்ட நிகழ்நிலை கருமங்களின் ஸஞ்சிதமாய் இருக்கின்றவற்றினுடைய முளைப்பே ஏற்படுகிறது. சில சமயம் ஸஞ்சிதத்தில் சேர்ந்திருக்கின்ற பழைய கருமங்களின் முளைப்பும் வெளியாகலாம்.

முளைப்பு [ஸ்புரணா] ஸஞ்சிதத்துக்கு ஏற்றவாறும் நிகழ்கிறது. ப்ராரப்தத்துக்கு ஏற்றவாறும் நிகழ்கிறது. ஸஞ்சிதத்துக்கு ஏற்றவாறு ஏற்படும் 'முளைப்பு' மனிதனை வேலை செய்யக் கட்டாயப் படுத்துவதில்லை. ஆனாலும் ஸஞ்சிதத்தின் முளைப்பில் ராகத்வேஷம் சேர்ந்துவிடுமாயின் அது செயலின் தீர்மானமாகி மனிதனை வேலை செய்யக் கட்டாயப்படுத்தலாம். ஆனால் அதில் விதிகள் சொல்லும் (விகித) கர்மங்களையேச் செய்யத் தூண்டும். தடுக்கப்பட்ட (நிஷித்த) கருமங்களைச் செய்யத் தூண்டாது. ஏனென்றால் விவேகத்தை முக்கியமாகக் கொண்ட இந்த மனித உடல் (நிஷித்த) கருமங்களைச் செய்வதற்காக ஏற்பட்டது அல்ல. எனவே விவேக ஆற்றலை, அதாவது தகுந்தது, தகாதது என்று பிரித்து தக்கதைச் செய்யும் ஆற்றலை வலிவடையச் செய்து நிஷித்தத்தை நீக்கிவிடும் பொறுப்பு அவனுக்கு உண்டு. இந்த விஷயத்தில் அவன் சுதந்திரமானவன். இது எவ்விதம் என்றால், அதாவது முளைப்பு எவ்விதம் ஏற்படுகிறது என்றால் ஒரு எடுத்துக்காட்டுக் சொல்லாம். ஒரு பாத்திரத்தில் முதலில் வெங்காயத்தைப் போடுவோம். மேலே வரிசையாக கோதுமை, கடலை, கம்பு, சோளம் முதலியவற்றைப் போட்டுவிட்டு எடுக்கத் தொடங்கினால் முதலில் சோளம் தான் வெளியே வரும். ஆனால் இடையிடையே வெங்காயமும் வரலாம். இந்த எடுத்துக்காட்டு முழுமையாக ஒத்துவராது. ஏனென்றால் வெங்காயம், கோதுமை

முதலிய பதார்த்தங்கள் பருப்பொருள்கள். ஆனால் ஸஞ்சித கர்மமோ உருவமற்றது. இந்த எடுத்துக்காட்டு புதிய நிகழ்நிலைக் கர்மங்களின் முளைப்பு அதிகமாகவும் பழைய கர்மங்களின் முளைப்புச் சிற்சில சமயங்களிலும் இருக்கும் என்பதைக் காட்டவே கொடுக்கப்பட்டது.

இவ்விதம் தூக்கம் வரும் பொழுதும் கூட அதிலும் முளைப்பு இருக்கிறது. தூக்கத்தில் விழிப்புநிலை அமுக்கப்பட்டுவிடுகிறது. அதனால் ஸஞ்சிதத்தின் அந்த முளைப்பு கனவு உருவமாகத் தோற்றம் தருகிறது. இதை கனவுநிலை என்று சொல்லுகிறோம்.

விழிப்பு நிலையிலும் கூட விழிப்பு, கனவு, ஸுஷுப்தி [சுழுத்தி = கனவைக் கடந்த ஆழ் தூக்கநிலை] என்ற மூன்றும் இருக்கும். மனிதன் விழித்த நிலையில் வேலை செய்யும் பொழுது அவன் விழிப்பில் விழித்த நிலையில் இருக்கிறான். விழித்த நிலையில் மனிதன் எந்த வேலையைச் செய்கிறானோ அந்த வேலையைத் தவிர, திடீரென்று வேறு ஒரு செயலின் முளை ஏற்படுகிறது. இது விழிப்பின் கனவுநிலையாகும். விழிப்பு நிலையில், சில சமயங்க ளில் வேலை செய்து கொண்டிருக்கும் பொழுதே ஒருவனுக்கு இந்த வேலையில் அல்லது முந்திய கர்மங்களினுடைய முளைப்பு ஏற்படாமலிருக்கலாம். அதாவது அவன் முனைந்து ஈடுபடாமலி ருக்கலாம். அந்த நிலை விழிப்பில் ஆழ்த்தூக்க நிலை [ஸுஷுப்தி நிலை] ஆகும்.

கர்மத்தைச் செய்யும் வேகம் அதிகமாக இருந்தால் விழிப்பு நிலையில் விழிப்பும், கனவும் அதிகமாக இருக்கும். ஸுஷுப்தி நிலை மிகவும் குறைவாக இருக்கும். ஒரு சாதகன் விழிப்பு நிலையில் ஸுஷுப்தியை இடைவிடாது இருத்திக் கொள்ள முடியுமானால் அவனுடைய சாதனை வேகத்தைப் பெறும். ஏனென்றால் விழித்த ஸுஷுப்தி நிலையில் பரமாத்மாவுடன் சாதகனுக்குத் தானாகவே மறைவற்ற உறவு ஏற்பட்டு விடுகிறது. இவ்விதம் ஸுஷுப்தி நிலையில் ஸம்ஸாரத்தில் [உலகுடன்] உறவு முறிந்து விடுகிறது. ஆனால் அறிவின் போக்கு அஞ்ஞானத் தில் [அவித்தையில் = அறியாமையில்] லயித்து விடுமானால் ஆன்ம சொருபத்தின் தெளிந்த அநுபவம் ஏற்படாது. ஆனால் விழித்த ஆழ்நிலைத் தூக்கத்தில் (ஸுஷுப்தியில்) புத்தி விழித்து இருக்குமானால் சொருபத்தின் (தன்னுடைய உண்மை உருவத் தின்) தெளிந்த அநுபவம் ஏற்படும்.

இந்த 'விழித்த ஸுஷுப்தி' ஸமாதி அல்ல. ஏனென்றால் இது தானே ஏற்படுவது. ஸமாதிக்குப் பயிற்சியின் மூலமாக விருத்தி களை [எண்ண ஓட்டங்களை] ஒரு முனைப்படுத்திக் கட்டுப்ப டுத்த வேண்டியிருக்கிறது. இதன் காரணமாகவே ஸமாதியில் புருஷ யத்னமும் [ஆத்ம முயற்சி] கூடவே இருக்கிறது. அதனால் உடலின் இருப்புத் தேவைப்படுகிறது. சொரூபத்தில் மட்டும் இருக்கிற நிலையில்லை. ஆனால் 'விழித்த ஸுஷுப்தியில்' அஹங்காரமோ, அப்யாஸமோ இல்லாமலேயே விருத்திகள் தாமாகவே அடங்கி விடுகின்றன. அதனால் 'சொரூப ஸ்திதீ' ஏற்பட்டுவிடுகிறது. அதாவது சொரூபத்தின் அநுபவம் கிடைத்து விடுகிறது.

கனவுநிலையில் புத்திக்கு கவனம் இருக்காது. அதனால் முறை எது? முறை மீறுவது எது? அடுத்தது எது? என்கின்ற விவஸ்தை இருக்காது. எப்படி என்றால் டில்லி நகரம் காணப்ப டும். ஆனால் பம்பாயின் கடைத்தெருக்களும் அவற்றில் கல்கத் தாவின் கடைகளும் காணப்படும். ஒரு உயிருள்ள மனிதனைப் பார்ப்பான். ஆனால் இறந்த வேறு ஒரு மனிதனுடன் பேச்சு நடத்துவான்.

விழித்த நிலையில் மனிதனுடைய மனதில் பலவிதமான செயல் முளைப்புகள் [ஸ்புரணாக்கள்] ஏற்பட்டுக் கொண்டிருக் கின்றன. எப்பொழுது விழிப்புநிலையில் மனம், இந்திரியங்கள், உடல் இவற்றின் மேல் புத்திக்கு உள்ள அதிகாரம் [கட்டுப்பாடு] நீங்கி விடுகிறதோ, அப்பொழுதே மனிதன் மனதில் வந்ததைப் பேசுகிறான். இவ்விதம் தக்கது, தகாதது என்று தீர்மானிக்கும் ஆற்றல் வேலை செய்வதில்லை. அப்பொழுது அவன் எளிய "நேர்மையான பித்தன்" என்று சொல்லப்படுகிறான். எவன் உடல், இந்திரியங்கள், மனதின் மேல் புத்தியின் அதிகாரம் இருக்கிறதோ அவன் எது சரியோ அதைப் பேசுவான். அவன் சரியல்ல என்று கருதுவதைப் பேசமாட்டான். அவன் கவனமாய் இருப்பதனால் எப்பொழுதும் நல்ல அறிவுடன் இருக்கிறான். அவன் "கெட்டிக் காரப் பித்தன்".

எவ்விதம் மனிதன் பரமாத்மப் ப்ராரப்தியை எது வரை அடையமாலிருப்பானோ அது வரை அவன் தன்னை இந்த முளைப்புகளிலிருந்து காத்துக் கொள்ள முடியாது. பரமாத்மப் ப்ராரப்தி ஏற்பட்டவுடன் எல்லா முளைப்புக்களும், முழுமையாக அழிந்து விடும். அதனால் தான் 'ஜீவன் முக்தர்கள்' ஆன மனிதர் களின் மனதில் தூய்மையற்ற கெட்ட எண்ணங்கள் வருவதே

யில்லை. அவர்களுடையது என்று சொல்லப்படுகின்ற உடலில் ப்ராரப்தத்தின் காரணமாக நோய் நொடியினால் சில சமயம் மயக்கம் ஏற்படலாம். உன்மாதம் [பித்து நிலை] ஏற்படலாம். அப்பொழுதும் கூட அவர்கள் ஸாஸ்திரம் தடை செய்த பேச்சைப் பேச மாட்டார்கள். நிஷித்தங்களைச் செய்யமாட்டார்கள். ஏனென்றால் அவர்கள் அந்தக் கரணம் [உட்புலன்கள்] சுத்தமாக இருப்பதால் ஸாஸ்திரங்கள் தடை செய்ததைப் பேசுவதோ, செய்வதோ அவர்கள் எண்ணத்தில் ஏற்படாது.



## ப்ராரப்த கர்மம்


ப்ராரப்த கர்மம்
அனுகூலமான [சாதகமான] சூழ்நிலை
அனுகூலம்-பிரதிகூலம் கலந்த சூழ்நிலை
பிரதிகூலமான [சாதகமற்ற] சூழ்நிலை
விருப்பப்படி பிரவிருத்தி [செயல் போக்கு]
விரும்பாப் பிரவிருத்தி
பிறர் விருப்பப்படி பிரவிருத்தி

ஸஞ்சிதத்திலிருந்து எந்த கர்மங்கள் பயன்தர முன் வருகின்றனவோ அந்தக் கர்மங்களை நாம் ப்ராரப்த கர்மம் என்று சொல்லுகிறோம். [ப்ரகர்ஷேண ஆரப்த: ப்ராரப்த:] இதன் பொருள் வேகத்துடன் பயன்கொடுக்க எது ஆரம்பித்து விட்டதோ அது ப்ராரப்தம். அதாவது நன்கு தொடங்கியுள்ளது என்று பொருள். ப்ராரப்தத்தினுடைய பயன்கள் அநுகூலமான [சாதகமான] அல்லது பிரதிகூலமான [சாதகமற்ற] சூழ்நிலைகளின் உருவத்தில் தோன்றுகின்றன. ஆனால் அவற்றை அநுபவிக்கும் முறையில் உயிர்களின் பிரவிருத்தி [செயல் அல்லது மனப்போக்கு] மூன்று விதமாக இருக்கும். ஒன்று தன்னிச்சைப்படியானது, 2. தன்னிச்சைப்படி அல்லாதது, அதாவது தெய்வ சங்கல்பப்படி நடப்பது, 3. மற்றவர் விருப்பப்படி செயல்படுவது.

எடுத்துக்காட்டு: 1. ஒரு வியாபாரி பொருளை வாங்கி விற்றான். அவனுக்கு லாபம் கிடைத்தது. மற்றொரு வியாபாரி இதே மாதிரி வாங்கி விற்றான், நஷ்டம் ஏற்பட்டது. இவ்விதம் லாபமோ, நஷ்டமோ ஏற்படுவது நல்ல அல்லது தீய செயல்களால் ஏற்பட்ட ப்ராரப்த வினையின் பலன். ஆனால் பொருள் வாங்குவது அவர்கள் தாம் கொண்ட இச்சைப்படி நடந்ததாகும்.

2. ஒரு மனிதன் எங்கேயோ போய்க் கொண்டிருந்தான். இடையே எதிர்ப்பட்ட ஒரு ஆற்றில் பணத்துடன் ஒரு பெட்டி மிதந்து வந்தது. அதை அவன் எடுத்துக் கொண்டான். மற்றொருவன் எங்கேயோ போய் கொண்டிருந்தான். அப்பொழுது ஒரு மரத்தின் கிளை ஒடிந்து அவன் தலையில் விழுந்து காயம் ஏற்பட்டது. இங்கே பணம் கிடைப்பதோ, காயப்படுவதோ அவர்கள் செய்த நல்ல, தீய செயல்களால் ஆன கர்மங்களின் ப்ராரப்த அம்சத்தின் [பயன் கொடுக்கத் தொடங்கியப் பகுதியின்] விளைவு ஆகும். ஆனால் பணப் பெட்டி கிடைப்பதோ, ஒடிந்த கிளை விழுவதோ அவர்கள் இச்சைப்படி நடக்காமல் தெய்வத்தின் விருப்பப்படி நிகழ்ந்ததாகும்.

3. ஒரு பணக்காரன் ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டான். அது அவனது வாரிசு ஆனபடியால் அவன் சொத்து அதற்குச் சேர்ந்தது. இவ்விதமே திருடர்கள் ஒரு பணக்காரனின் சொத்தைத் திருடிவிட்டார்கள். பையனுக்குப் பணம் கிடைப்பதும், திருடர்கள் கவரப் பணம் போய் விடுவதும் அந்தப் பணக்காரர்களுடைய நல்ல, தீய கர்மங்களினால் விளைந்து ப்ராரப்தமான கர்மங்களின் பயனாகும். ஆனால் தத்துப் போவதும், திருட்டுப் போவதும் பிறர் இச்சையினால் ஏற்பட்ட விளைவு.

இங்கே ஒரு கருத்தைப் புரிந்து கொள்ள வேண்டும்.. கர்மங்கள் செயல்களாகத் தோன்றா. ஆனால் சூழ்நிலைகளாக வரும். அதாவது ப்ராரப்த கர்மத்தின் பயனாகத் தோன்றுவது தக்க சூழ்நிலையாகவேயிருக்கும். நிகழ்நிலை கர்மங்களைப் ப்ராரப்தத்தின் பலன்களாக எண்ணிக்கொள்ளத் தொடங்கிவிட்டோமானால் ஸாஸ்திரங்களும் பெரியவர்களும், 'இதைச் செய் அதைச் செய்யாதே' என்று சொல்லுகின்ற விதிகளும், தடைகளும் பொருளற்றுப் போய்விடும். மற்றொன்று :- எப்படிப்பட்ட கர்மங்களைச் செய்திருந்தோமோ, அவற்றிற்கு ஏற்றவாறே பிறவி ஏற்படும். அவைகளுக்கு ஏற்றவாறே கர்மங்கள் ஏற்படும். அப்பொழுது அந்த கர்மங்கள் மேலும் புதிய கர்மங்களைச் செய்விக்கும். இவ்விதம் அந்தக் கர்ம பரம்பரை போய்க் கொண்டே இருக்கும். இதற்கு முடிவு இருக்காது.

ப்ராரப்த கர்மங்களின் காரணமாகக் கிடைக்கின்ற பயன்கள் இரு வகையாகும்: 1. கிடைத்து விட்ட பயன், 2. இது வரை கிடைக்காத பயன். உயிர்ளுக்கு எதிரே அநுகூலமான அல்லது பிரதிகூலமான [சாதக, பாதக] சூழ்நிலை வருகிறதே அது கிடைத்துவிட்ட பயனாகும். இதே பிறவியிலேயே மேலே வர இருக்கிறதே அந்தச் சூழ்நிலை அது இதுவரை கிடைக்காத பயனாகும். [கிடைக்க இருக்கிற பயனாகும்].

நிகழ்நிலைக் கர்மங்களின் எந்தப் பயன் அம்சம் ஸஞ்சிதத்தில் சேர்ந்து இருக்கிறதோ அதுதான் சாதகமான அல்லது பாதகமான அல்லது சாதக, பாதகம் கலந்த சூழ்நிலையின் உருவத்தில் உயிர்களுக்குக் கிடைக்கிறது. ஸஞ்சிதம் இருக்கின்ற வரையில் ப்ராரப்தமும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும். இந்தச் சூழ்நிலை உயிர்களை இன்புறவோ, துன்புறவோக் கட்டாயப்படுத்துவதில்லை. மாறும் குணமுடைய சூழ்நிலையுடன் இணைந்து கொள்ளுவதுதான் சுகமோ, துக்கமோ அடைய முக்கிய காரணம். எவன் இந்த பரிஸ்திதியுடன் இணைய வேண்டும் என்று எண்ண மாட்டானோ அவன் விவேகம் நிறைந்தவன். அவன் சுகம் அடைவதுமில்லை. துக்கம் அடைவதுமில்லை. அவன் நிலை எப்போதும் 'ஸாம்யாவஸ்தை'யில் அதாவது சமநிலையில் இருக்கும். அதுவே அவனுடைய சொரூப நிலையாகும்.

கர்மங்களில் மனிதனுக்குப் ப்ராரப்தம் வலிவுள்ளதா அல்லது புருஷயத்னம் [மனித முயற்சி] வலிவுள்ளதா? இந்த இரண்டில் எது முக்கியம்? இவ்விஷயத்தில் அநேக ஐயப்பாடுகள் இருக்கின்றன. இதற்கு ஒரு சமாதானம் ஏற்பட வேண்டுமென்றால் முதலில்

ப்ராரப்தம். என்றால் என்ன? புருஷார்த்தம் என்றால் என்ன? என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

மனிதனுக்கு நான்கு வகையான விருப்பங்கள் ஏற்படுகின்றன. அவை 1. பணம், 2. தர்மம், 3. போகம் அல்லது இன்பம், 4. விடு தலை அல்லது முக்தி பற்றியவையாகும். நடைமுறை மொழியில் இந்நான்கினையும் அர்த்தம், தர்மம், காமம், மோக்ஷம் [பொருள், அறம், இன்பம், வீடு] என்று சொல்லுகிறோம்.

1. பொருள்: பணத்தைப் பொருள் என்று சொல்லுகின்றோம். சொத்து என்றாலும் அதுதான். சொத்து இருவகைகளாக இருக் கலாம். 1. ஸ்தாவரம்: நிலை பேறு உள்ளது, அசையாதது. 2. ஜங்கமம் அசைவது. பொன், வெள்ளி, பணம், பூமி, நிலம், வீடு இவையெல்லாம் அசையாச் சொத்து. மாடு, பசு, எருமை, ஒட்ட கம், ஆடு முதலியவை ஜங்கமம் அல்லது இடம் பெயரும் சொத்து.

2. தர்மம்: அறம் - ஆசை கொண்டோ அல்லது ஆசைக ளற்றோ செய்யப்படும் வேள்வி, தவம், தானம், விரதம், தீர்த்த யாத்திரை முதலியவை தர்மமாகும்.

3. காமம் அல்லது இன்பம்: இது எட்டு வகையாக இருந்து இன்பம் கொடுக்கும்.

அவை 1. சப்தம் [ஒலி], 2. ஸ்பர்சம் [ஊறு], 3. ரூபம் [உருவம்], 4. ரஸம் [சுவை], 5. கந்தம் [மணம்], 6. மானம் [மரியாதை], 7. பெருமை, 8. வசதி [நிம்மதியான இருப்பு].

(அ) சப்தம் இரண்டு வகைகளாக இருக்கும். 1. எழுத்து, 2. ஒலி அல்லது உச்சரிப்பு. இலக்கணம், அகராதி, இலக்கியம், கதைகள், புதினங்கள் ஆகியவை எழுத்து வடிவம் கொண்ட சப்தங்கள்.

எழுத்து:

எழுத்துச் சப்தங்களிலும் பத்து வகை ரஸங்கள் உண்டு: 1. சிங்காரம், 2. ஹாஸ்யம், 3. கருணை, 4. ரௌத்திரம், 5. வீரம், 6. பயானகம் அல்லது அச்சம், 7. பீபத்ஸம் [அருவருக்கத்தக்கது], 8. அத்புதம், 9. சாந்தம், 10. வாத்ஸல்யம் [சிறாரிடம் காட்டும் அன்பு]. இந்தச் சுவைகள் சித்தம் இளகுவதால் ஏற்படுபவை. இவற்றை யெல்லாம் பகவான் விஷயமாக பயன் கொண்டோமானால் அவை நமக்கு மங்களங்களைச் செய்விக்கும். இதை விட்டு நம்முடைய

இன்பத்திற்காகப் பயன் கொள்வோமானால் நம்மை வீழ்ச்சிப் பாதையில் அழைத்துச் சென்று விடும்.

ஒலி :

1. தோற்கருவி, 2. துளைக் கருவி, 3. தந்திக் கருவி முதலான இசைக் கருவிகளிலிருந்து பெறும் ஒலி.

தோற்கருவி : மத்தளம், தவில், கஞ்சிரா, தப்லா, டோலக்.
துளைக்கருவி : புல்லாங்குழல், நாதஸ்வரம், ஷெனாய்.
தந்திக்கருவி : யாழ், வயலின், ஸிதார், ஸாரங்கி.

இந்த இருவகை ஒலிகளால் கிடைக்கின்ற சுகம் சப்த சுகமாகும்.

(ஆ) ஸ்பரிசம்: [தொடுதல் அல்லது ஊறு] மனைவி, மகன், நண்பன் ஆகியவர்களுடன் சேரும்போது; சூடு, குளிர், மிருதுவான பொருள்கள் இவற்றுடன் நம்முடைய தோல் இணையும் போது ஏற்படுகின்ற இன்பம் ஸ்பரிச இன்பமாகும்.

(இ) உருவம்: [காட்சி] கண்களால் நாம் விளையாட்டு, வித்தைச் செயல்கள், சினிமா, காடு, மலை, குளம், கட்டடம் இவற்றின் அழகைக் கண்டு பெறுகிற இன்பம் காட்சி இன்பமாகும்.

(ஈ) சுவை: இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கசப்பு, கார்ப்பு என்ற அறுவகை ரஸம் உள்ள பொருள்களைச் சுவைப்பதினால் ஏற்படுகின்ற இன்பம் சுவை இன்பமாகும்.

(உ) மணம்: மூக்கினால் அத்தர், தைலம், பொடி, பூ முதலிய வற்றை முகர்ந்து நாம் பெறும் இன்பம் மண இன்பமாகும். வெங் காயம், பூண்டு முதலியவற்றின் கசப்பான மணத்தினாலும் சுகம் ஏற்பட்டால் அதுவும் மண சுகம் தான்.

(ஊ) மானம்: நம்முடைய உடலுக்குக் கிடைக்கின்ற மரி யாதை, வரவேற்பு ஆகியவற்றால் ஏற்படுகின்ற சுகம், மானத்தால் [பாராட்டால்] ஏற்படுகின்ற சுகம்.

(எ) பெருமை: புகழ்வதினால் அல்லது மற்றவர் சபாஷ் என்று கை தட்டுவதால் ஏற்படுகின்ற இன்பம் பெருமை தரும் இன்பமாகும்.

(ஏ) நிம்மதி நிலை: உடலுக்கு உழைப்பின்றி நிம்மதியாகப் [படுத்துக்] கிடப்பதில் ஏற்படுகின்ற இன்பம் நிம்மதி இன்பமாகும்.

4. மோக்ஷம்: [வீடு] ஆத்ம ஸாக்ஷாத்காரம் [ஆத்ம தரிசனம்], தத்வஞானம், ஆன்மிக சுகம், நற்கதி அடைதல், முக்தி, ஈச்வர தரிசனம், பகவானிடத்தில் அன்பு இவையெல்லாம் மோக்ஷத்தின் மறு பெயர்களே.

அறம், பொருள், இன்பம், வீடு இவைகளில் கவனித்தோமானால், பொருளும், தர்மமும் ஒன்று மற்றொன்றை அதிகரிக்கச் செய்கிறது. அதாவது பொருளினால் தர்மம் வளரும். தர்மத்தினால் பொருள் சேரும். ஆனால் த்ர்மத்தை காமத்தை அடையக் காப் பாற்றினோமானால் அந்த தர்மம் விரும்பியதைத் தந்து விட்டு அழிந்து விடும். பொருளும் 'காமனா பூர்த்திக்காக' செலவழிக்கப் படுமானால் அந்தப் பொருளும் விரும்பியதைத் தந்துவிட்டு அழிந்துவிடும். இதிலிருந்து விளங்குவது என்ன என்றால் காமம், தர்மம், அர்த்தம் இரண்டையும் விழுங்கிவிடும். அதனால் தான் கீதையில் பகவான் கண்ணன் காமத்தை 'பெருந்தீனிக்காரன்' என்று சொல்லுகிறார். தர்மத்தினுடைய அனுஷ்டானம் காமத்தை விட்டுவிட்டுச் செய்யப்படுமானால் அது அந்தக் கரணங்களைச் சுத்தம் செய்து விடுதலை தந்துவிடும். இதே போல் பணத்தை காமத்தை [சுயநலத்தை] விட்டுவிட்டு பிறர் உதவிக்காக, பிறர் நலத்தில் பிறருக்கு இன்பம் தரச் செலவழிக்கப் படுமானால் அதுவும் அந்த கரணங்களைத் தூய்மை ஆக்கி விடுதலை பெற்றுத்தரும்.

பொருள், அறம், இன்பம், வீடு இவைகளில் பொருளும், போகமும் பெறுவதில் ப்ராரப்தம் பெரும் பங்கு வகிக்கிறது. புருஷார்த்தமோ [மனித முயற்சியோ] சிறு பகுதி தான் வகிக்கிறது. தர்மத்திலும், மோக்ஷத்திலும் புருஷார்த்ததிற்கு அதிக முக்கியத் துவம் உண்டு. ப்ராரப்தத்திற்கு குறைந்த முக்கியத்துவமே உண்டு. ப்ராரப்தம், புருஷார்த்தம் இவைகளின் களன்கள் தனித்தனி ஆனவை. அந்தந்த இடத்தில் இரண்டுக்கும் முக்கியத்துவம் உண்டு. இதைத் தான் பின்வரும் ஸ்லோகம் சொல்லுகிறது.

**ஸந்தோஷஸ்த்ரிஷு கர்த்தவ்ய: ஸ்வதாரே போஜனே தனே**
**த்ரிஷு சைவ ந கர்தவ்ய: ஸ்வாத்யாயே ஜபதாநயோ:**

இதன் பொருள்: மனைவி, மக்கள், பரிவாரம், சாப்பாடு, சொத்து இவைகளின் விஷயத்தில் சீக்கிரம் மனதில் நிறைவு கொள்ள வேண்டும். ஆனால் படிப்பு, பூஜை, ஸ்தோத்திரம், நாமஜபம், கீர்த்தனம், தானம் முதலிய விஷயங்களில் ஒரு போதும் சந் தோஷம், [திருப்தி] அல்லது நிறைவு அடையக் கூடாது. அதாவது ப்ராரப்தத்தின் பயனான சொத்திலும், சுகத்திலும் திருப்தி ஏற்

பட்டு விடவேண்டும். ஏனென்றால் ப்ராரப்தப்படிதான் அவை கிடைக்கும். அதற்கு மேல் என்ன முயன்றாலும் கிடைக்காது. ஆனால் தர்மானுஷ்டானத்தில் நம்முடைய நன்மை இருக்கிறது. அதைச் செய்வதில் திருப்தி அடைந்து விடக்கூடாது. ஏனென் றால் இதை செய்யத்தான் மனித உடல் கிடைத்திருக்கிறது.

கர்மங்கள் இரண்டு வகைப்படும். 1. சுபம் அதாவது புண்ணி யம், 2. அசுபம் அதாவது பாவம். சுப கர்மத்தின் பயன் சுகம் தரக்கூடிய சூழ்நிலையாகும். அசுப கர்மத்தின் பயனாக துயர் தரும் சூழ்நிலை விளையும். கர்மங்கள் புறத்தே செய்யப்படுபவை. அவற்றின் பயனும் புறத்தே உள்ள சூழ்நிலையின் உருவத்தில் தான் வந்து கிட்டும். ஆனால் அந்தச் சூழ்நிலைகளின் காரண மாக பெறப்படும் இன்பமோ, துன்பமோ அகத்து அநுபவமாகும். எனவே சூழ்நிலைகளில் இன்பத்தையோ, துன்பத்தையோ பெறுவது அந்த கர்மங்களின் பயன் அல்ல. அதாவது ப்ராரப்தம். சூழ்நிலையைத் தான் கொடுக்கும். இன்பமோ, துன்பமோ உணர் வது மனிதனுடைய முட்டாள் தனத்தின் பயன்.

யத்பாவி தத்பவத்யேவ யதபாவ்யம் ந தத்பவேத்
இதி நிச் சிதபுத்தீநாம் ந சிந்தா பாததே க்வசித்
[நாரதபுராணம், பூர்வ: 37/47]

எது நடக்க வேண்டுமோ அது நடந்தே தீரும். நடக்கக் கூடாதது ஒரு காலும் நடவாது. யாருடைய புத்தியில் இந்த உறுதி ஏற்பட்டு விடுகிறதோ அவர்களுக்கு ஒருபோதும் கவலை அல் லது வருத்தம் ஏற்படுவது இல்லை.

பகவான் மேல் அல்லது ப்ராரப்தத்தின் மேல் நம்பிக்கை ஏற்பட்டுவிட்டால் மிகமிக துன்பம் தரும் சூழ்நிலை வந்தாலும் கூட சித்தத்தில் இனிமையே இருக்கும். மகிழ்ச்சியே இருக்கும்.

லாலநே தாடநே மாதுர்நாகாருண்யம் யதார்பகே
தத்வதேவ மஹேசஸ்ய நியந்துர்குணதோஷயோ:

குழந்தையைத் தாலாட்டுவது, அடிப்பது இரண்டிலுமே தாயின் அன்பின்மை இல்லை. அதேபோல் உயிர்களின் குண தோஷங்களைக் கட்டுப்படுத்துகிற பாமேசுவரனுக்கும் யாரிடமும் [அக்ருபா] அன்பின்மை என்பது கிடையாது. இதை நினைவில் கொண்டால் துன்பம் தரும் சூழ்நிலையில் பாவம் கழிகிறது என்று அறிந்து மேலே பாவம் செய்யாதிருக்கக் கவனமாக இருப்போம். பாவம் தொலைந்தால் அந்தக் கரணம் தூய்மை பெறும்.

சாதகன் இன்பமான அல்லது துன்பம் தரவல்ல சூழ்நிலையை நல்லமுறையில் பயன் கொள்ள வேண்டும். கெடுதலுக்குப் பயன்படுத்தக் கூடாது. இன்பச்சூழ்நிலை வந்தால் அப்பொழுது அனுகூலமான பொருள்களை மற்றவர் நலனுக்காக சேவை உள்ளத்துடன் செலவிட்டால் அது இன்பச் சூழ்நிலையின் நல்ல உபயோகமாகும். ஆனால் அதைத் தன் இன்பத்துக்காகச் சுகித் தல் கெட்ட உபயோகமாகும். அதேபோல் துன்பம் தரவல்ல சூழ்நிலை ஏற்பட்டால் இன்பத்தின் விருப்பத்தைத் தியாகம் செய்துவிட்டு, என் பாவங்கள் நசிப்பதற்காகவும் மேலே பாவம் செய்யாமல் கவனமாக இருப்பதற்காகவுமே அதாவது என்னு டைய முன்னேற்றத்திற்காகவே இந்த நிலை வந்திருக்கிறது என்ற எண்ணத்துடன் சித்தத்தை இனிமையாக வைத்துக் கொள்ளுதல் துன்பச் சூழ்நிலையின் நல்ல உபயோகமாகும். அதற்காக வருந் துவது கெட்ட வகையில் பயன் கொள்வதாகும்.

மனித சரீரம் சுக, துக்கத்தை அநுபவிக்க [துய்க்க] ஏற்பட்ட தல்ல. சுகத்தை அநுபவிப்பதற்கு இடம் சொர்க்கம் [துறக்கம்] முதலியவை. துக்கம் அநுபவிக்கும் இடம் நரகமும், எண்பத்து நான்கு லட்சம் யோனிகளுமாகும். அவை போக இடங்கள். ஆனால் மனிதப்பிறவி, 'கர்ம யோனி'. ஆனால் யார் மனித சரீரம் எடுத்தும் கவனம் செலுத்தாமல் பிறப்பு, இறப்பு வட்டத்துக்குள் ளேயே சுழன்று கொண்டிருக்கிறார்களோ அவர்களுக்கு இது கர்ம யோனி. அதாவது பாவ, புண்ணியங்களைக் கழித்து விட்டு முக்தி அடைய முயல உதவும் பிறவியாவதில்லை. உண்மையில் இந்த உடல் சுக, துக்கத்தை மீறிச் சென்று முக்திநிலையை அடைவதற் காகவே ஏற்பட்டது. இதை கர்மயோனி என்று சொல்லாமல் சாதனயோனி என்றே சொல்ல வேண்டும்.

ப்ராரப்த கர்மங்களின் பயனாக வருகின்ற இன்ப, துன்ப சூழ் நிலைகள் இரண்டிலும் சுகம் தரும் சூழ்நிலையை சொரூபமாகவே [அப்படியே] விட்டுவிட மனிதனுக்கு சுதந்திரம் உண்டு. ஆனால் துக்கம் தரும் சூழ்நிலையை விட்டுவிடுவதில் அவனுக்கு சுதந்தி ரம் கிடையாது. அதற்குக் காரணம் சுகம் தரும் சூழ்நிலை பிற ருக்கு உதவுவதனால் அல்லது இன்பம் தந்ததனால் வந்த விளைவு. ஆனால் துன்பச் சூழ்நிலையோ பிறருக்குத் துன்பம் தந்ததனால் வந்த விளைவு. ஒரு எடுத்துக்காட்டின் மூலம் இதை விளக்குவோம்.

சியாமலால் என்பவன் ராமலால் என்பவனுக்கு நூறு ரூபாய் கடன் கொடுத்தான். ராமலால் ஒரு மாதத்தைக் குறித்து அப் பொழுதே வட்டியுடன் திருப்பிக் கொடுப்பேன் என்று உறுதி

அளித்தான். மாதம் கழிந்தது. ராமலால் கடனைத் திருப்பித் தரவில்லை. சியாமலால் ராமலாலிடம் சென்று, சொன்னபடி தரவில்லையே இப்பொழுது கொடு என்றான். ராமலால், இப் பொழுது இல்லை நாளை மறுநாள் வா என்றான். சியாமலாலும் மூன்றாம் நாள் சென்றான். பணத்தைக் கேட்டான். அப்பொழுதும் ராமலால், பணம் கிடைக்கவில்லை, நாளை மறுநாள் வா என் றான். மீண்டும் மூன்றாவது நாள் சியாமலால் சென்றான். பணத் தைக் கொடு என்று கேட்டான். ராமலால் நாளைக்குக் கண்டிப் பாகத் தருவேன் என்றான். சியாமலால் மறுநாளும் சென்றான். அப்பொழுது ராமலால் சொன்னான். என்னிடம் பணமேயில் லையே, நான் எப்படிக் கொடுப்பேன்? நாளை மறுநாள் வா என்றான். சியாமலாலுக்குக் கோபம் வந்துவிட்டது. 'நாளை மறுநாள், நாளை மறுநாள் என்கிறாய் கொடுக்கிற வழியாக இல்லை' என்று சொல்லிக் கொண்டு ராமலாலை செருப்பால் ஐந்து அடிகள் அடித்து விட்டான். ராமலால் கோர்ட்டுக்குச் சென்று பிராது கொடுத்தான். நீதிபதி சியாமலாலைக் கூப்பிட்டு, 'நீ ராமலால் வீட்டிற்குச் சென்று அவனைச் செருப்பால் அடித் தாயா?' என்று கேட்டார். சியாமலால், ஆமாம் அடித்தேன் என் றான். நீதிபதி, ஏன் அடித்தாய்? என்று கேட்டார்.

சியாமலால் பின்வருமாறு சொன்னான். "இவன் என்னிடம் பணம் வாங்கியிருந்தான். குறிப்பிட்ட ஒரு மாதத்தில் கொடுப்ப தாகச் சொன்னான். சென்று கேட்டபொழுது நாளை, நாளை மறுநாள் என்று சொல்லியே எனக்கு எரிச்சல் மூட்டினான். கோபம் வந்தது. ஐந்து செருப்படி அடித்து விட்டேன். துரையே! இந்த ஐந்து அடிக்கு ஐந்து ரூபாய்களை கழித்துக் கொண்டு மிச்சப் பணத்தைக் கொடுக்கும்படி உத்தரவு இடுங்கள்". நீதிபதி சிரித்துக் கொண்டு சொன்னார். "இது கிரிமினல் கோர்ட் [குற்ற இயல் வழக்கு மன்றம்] இங்கே பணம் கொடுப்பதெல்லாம் சொல்ல முடியாது. தண்டனை கொடுக்கத்தான் இந்த கோர்ட். நீ செருப்பால் அடித்ததற்குப் பதிலாக சிறைப்பட வேண்டும், அல்லது அபராதம் கட்ட வேண்டும். பணம் வேண்டும் என்றால் சிவில் கோர்ட்டுக்குப் போ. அந்த இலாகா தனியானது. அங்கே உனக்குப் பணம் கிடைக்கலாம்.

அசுப கர்மங்களின் பலனான துன்பச் சூழ்நிலைக் "குற்றவியல் மன்றம்", இதனால் அதை சொரூபத்துடன் விட்டுவிட முடியாது. சுப கர்மங்களின் [புண்ணியங்களின்] பயன், இன்பச் சூழ்நிலை, அது சிவில் விஷயம். அதனால் அதை சொரூபத்துடன் விட்டு விட முடியும்.

இதிலிருந்து, மனிதனுடைய பாவ, புண்ணியங்களின் இலாக் காக்கள் தனித்தனி என்பது உறுதியாகிறது. சுப கர்மாக்கள் [புண்ணியங்கள்], அசுப கர்மங்கள் இரண்டும் தனித்தனியாகச் சேருகின்றன. ஒன்று, மற்றொன்றை இல்லாமல் ஆக்க முடியாது. அதாவது பாவங்கள், புண்ணியங்களை குறைக்க முடியாது. புண்ணியங்கள், பாவங்களை ஒதுக்க முடியாது.

உலகத்தில் புண்ணியாத்மா, புண்ணியாத்மாகவும் நன்னடத் தைக் கொண்டவனாகவும் இருக்கின்ற ஒருவன் துக்கமடைகி றான். ஆனால் கெட்ட நடத்தை உள்ள ஒரு பாவி சுகத்தை அநுபவித்துக் கொண்டிருக்கிறான். இந்த விஷயத்தை எடுத்துக் கொண்டு நல்லவர்கள் இடையேயும் கூட இங்கே ஈச்வரன் நியாயம் எங்கே என்ற சந்தேகம் எழுகிறது.

மகாபாரத்தில் ஒரு கதை வருகிறது. ஒரு நாள் திரௌபதி யுதிஷ்டிரரிடம் பின்வருமாறு கேட்டார். தாங்கள் ஒரு அடி கூட தர்மத்திற்கு விரோதமாக நடப்பதில்லை. தாங்கள் காட்டிலிருந்து சங்கடப்படுகிறீர்கள். துரியோதனனோ தர்மத்தைப் பற்றி சற்றுக் கூட எண்ணுவதில்லை. சுயநலமே கொண்டு திரிகிறான். அவன் அரசாளுகிறான், வசதியுடன் இருக்கிறான். சுகம் அனுபவிக்கி றான். இது எப்படி? இதற்கு யுதிஷ்டிரர் பின்வருமாறு விடை இறுத்தார். "எவன் சுகம் பெறும் நோக்கத்தோடு தர்மத்தைக் காக்கிறானோ அவன் தர்மத்தின் உண்மையை அறிய மாட்டான். அவன் மிருகத்தைப் போல சுகபோகத்தில் ஆசை கொண்டு துக்கத்திற்கு அஞ்சுகிறான். அவன் தர்மத்தின் தத்துவத்தை எப்படி அறிவான்! மனிதனின் மனிதத்தன்மையே சுகமோ, துக்கமோ எதையும் குறிக்கொள்ளாமல் ஸாஸ்திர விதிப்படி தன்னுடைய தருமத்தை அதாவது கடமையைச் செய்து கொண்டே இருப்பதில் தான் இருக்கிறது."

ஈச்வர நியாத்தில் ஐயம் கொண்டவர்களுக்குச் சமாதானம் இது தான். இப்பொழுது துக்கத்தை அநுபவிக்கின்ற புண்ணி யாத்மா முற்பிறவியில் செய்த பாவத்தின் பயனை அநுபவிக்கி றான். இப்பொழுது செய்கின்ற புண்ணியத்தின் பயன் அல்ல அது. அவ்விதமே பாவம் செய்பவன் அநுபவிக்கின்ற சுகம் முற்பிறவி யில் செய்த புண்ணியத்தின் பயனே; இந்த பிறவியில் செய்கின்ற பாவத்தின் பயன் அல்ல.

இங்கே இன்னும் ஒரு தத்துவப் பொருள் இருக்கிறது. 'கர்மங் களின் பயனாக அநுகூலமாக வருகிற, சூழ்நிலையில் சுகமே

ஏற்படும். பிரதிகூலமான சூழல் துக்கத்தையே தரும்' என்பதும் உண்மையல்ல. அநுகூலநிலை வந்தால் மனதில் கர்வம் ஏற்படு கிறது. கீழே உள்ளவர்களை வெறுக்கிறான். தன்னைவிட வசதி கொண்டவர்களைப் பார்த்து பொறாமைப்படுகிறான், வெறுப்பு கொள்ளுகிறான். சித்தத்தில் எரிச்சல், மனதில் கெட்ட எண்ணங் கள் ஏற்படுகின்றன. மற்றவரின் சொத்து எப்படியாவது நஷ்டமாக வேண்டும். மற்றவரை அவமானப்படுத்த வேண்டுமென்ற முயற் சியும் செய்கிறான். இவ்விதம் சுகத்திற்கும், சந்தோஷத்திற்கும் உரிய சொத்து, சுகம் போன்ற வசதிகள் இருந்தும் அவன் சுகமாக இருக்க மாட்டான். ஆனால் வெளியேயிருந்து பார்ப்பவர்கள் அவன் மிகுந்த சுகமாக இருப்பதாக எண்ணிப் பிரமை கொள்வார் கள். இவ்விதமே தியாக உணர்வும், பற்றற்ற நிலையும் கொண்ட ஒரு மனிதனைப் பார்த்து வசதியுள்ள மனிதன் இரக்கம் காட்டு கிறான். 'பாவம் அவன் கஷ்டப்படுகிறானே' என்று எண்ணுகி றான். உண்மையில் இந்த தியாகியின் மனதில் இருக்கின்ற அமைதியும், சந்தோஷமும் பணக்காரன் எவன் மனதிலும் இருக்க முடியாது. அதனால் பணமே சுகம் என்பதில்லை. பணம் இல்லாததே கஷ்டம் என்பதும் இல்லை. இன்பம் அல்லது சுகம், இதயத்தின் அமைதியையும், மகிழ்ச்சியையும் பொருத்தது. இதயத்தில் எரிச்சலும், தாபமும் இருக்குமானால் அதுதான் துக்கம்.

புண்ணியத்தையும், பாவத்தையும் அனுபவிப்பதில் ஒரே வகையான விதியில்லை. புண்ணியத்தை நிஷ்காம எண்ணத்து டன் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட்டால் அது முடிந்துவிட லாம். ஆனால் பாவமோ பகவானுக்கு அர்ப்பணம் செய்தாலும் முடியாது. பாவத்தின் பயனை அநுபவித்தே தீரவேண்டும். பகவான் ஒத்துக் கொள்ளாத காரியம் தானே பாவம். அதையே அவருக்கு எப்படி அர்ப்பணம் செய்ய முடியும்? அது எப்படி அர்ப்பணமாகும். உண்மையில் பகவானுடைய ஆணைப்படி செய்கின்ற காரியங்களை பகவானுக்கு அர்ப்பணமாக்க முடியும். இதை விளக்க ஒரு கதை உண்டு.

ஒரு அரசன் தன் குடிகளுடன் ஹரித்துவாரம் சென்றான். அவனுடன் பலவகை மக்கள் இருந்தனர். அவர்களிடையே ஒரு சக்கிலியனும் இருந்தான். அவன் எண்ணினான்; இந்த பனியாக் கள் [வியாபாரிகள்] பெரிய கெட்டிக்காரர்கள். தங்கள் புத்திசாலி தனத்தினால் பணக்காரர்களாகியிருக்கிறார்கள். நாமும் அவர்கள்

புத்திசாலித்தனத்தைப் பின்பற்றினோமானால் நாமும் பணக்கா ரனாகலாம். இப்படி எண்ணி அவன் ஒரு கெட்டிக்கார பனியா வினுடைய செயல்களை கவனித்துக் கொண்டே போனான். ஹரித்துவாரத்தில் பிரம குண்டத்தில் பண்டா [புரோகிதர்] தான, புண்ணியத்திற்கான சங்கல்பம் செய்து வைத்தான். அப்பொழுது வியாபாரி, "நான் அந்த அந்தணர்க்கு நூறு ரூபாய் கடன் கொடுத் தேன். இன்று நான் தான ரூபமாக அந்த ரூபாயை கிருஷ்ணார்ப்ப ணம் செய்கிறேன்" என்று கூற, பண்டா சங்கல்பம் செய்வித்தான். சக்கிலியன் பார்த்தான். இவன் ஒரு காசுகூடக் கொடுக்காமல் தானம் கொடுத்துவிட்டதாக ப்ரசித்தி பெறுகிறான். நான் இந்த பனியாவுக்குக் குறைந்தவனல்ல. பண்டா சக்கிலியனுக்கு சங்கல் பம் செய்விக்கத் தொடங்கினான். சக்கிலியன் சொன்னான், "அந்த பனியா எனக்கு நூறு ரூபாய் கடன் கொடுத்தான். அதை நான் இன்று கிருஷ்ணார்ப்பணம் செய்கிறேன்." அவன் சொன்னது பண்டாவுக்கு முழுவதும் புரியவில்லை. இருந்தாலும் அப்படியே சங்கல்பம் செய்து வைத்து விட்டான். சக்கிலியனுக்கு ஒரே சந்தோஷம். நானும் அந்த வியாபாரியைப் போல நூறு ரூபாய் தானம் செய்து புண்ணியத்தை அடைந்து விட்டேன்.

எல்லோரும் வீட்டிற்கு வந்தார்கள். நேரத்தில் உழவுத்தொழில் நடந்தது. பிராமணனுடைய வயலிலும், சக்கிலியன் வயலிலும் நல்ல விளைச்சல் ஏற்பட்டது. பிராமணன் பனியாவிடத்தில், ஐயா நீங்கள் விரும்பினால் நூறு ரூபாய்க்கு உள்ள தானியத்தை எடுத் துக் கொள்ளுங்கள். இதனால் உங்களுக்கும் லாபம் ஏற்படும், எனக்கும் கடன் தீரும். அதற்கு பனியா, "அந்தணரே! நான் ஹரித்துவாரம் சென்றிருந்த போது உங்களுக்குக் கொடுத்த கடனை தானம் என்று சொல்லிவிட்டேன்", என்று சொன்னான். பிராமணனோ, "நான் வாங்கியது கடன் தான். வட்டியுடன் திருப் பிக் கொடுக்க விரும்புகிறேன்", என்றான். செட்டியார் [வியாபாரி] சொன்னார், தாங்கள் கொடுத்துத் தான் ஆக வேண்டுமென்றால் உங்களுடைய சகோதரிக்கோ, பெண்ணுக்கோ கொடுத்துவிடுங் கள். நான் பகவானுக்கு என்று அர்ப்பணம் செய்த பணத்தை எப்படி வாங்கிக் கொள்ள முடியும்? பிராமணன் என்ன செய்வான்? தன் வீட்டிற்குப் போய் விட்டான்.

இப்பொழுது சக்கிலியன் யாரிடம் நூறு ரூபாய் வாங்கியிருந் தானோ அந்த வியாபாரி சக்கிலியன் வயலுக்கு வந்து என் கடனைக் கொடு, நெல்லாக வேண்டுமானாலும் கொடு என்றான். பிராமணன் கொடுத்த போதும் வியாபாரி வாங்கிக் கொள்ள வில்லை என்ற கதையைச் செருப்பு தைக்கிறவன் கேட்டு இருந்

தான். அதைக் கொண்டு அவன், நான் தான் சங்கல்பம் செய்து விட்டேனே, ரூபாய் எதற்காகக் கொடுக்க வேண்டும் என்று எண்ணி வியாபாரியிடம், "நானும் ஹரித்துவாருக்கு வந்த வியாபாரியைப் போல கங்கை நீரில் நின்று எல்லாப் பணத்தையும் கிருஷ்ணார்ப்பணம் செய்துவிட்டேன். நான் எதற்கு ரூபாய் கொடுக்க வேண்டும்?" என்று கேட்டான். வியாபாரி சொன்னான், "நீ அர்ப்பணம் செய்வதினால் கடன் [வாங்கிய கடன்] தீர்ந்து விடாது. ஏனென்றால் நீ என்னிடம் கடன் வாங்கினாய், நீ விட்டுவிட்டேன் என்று சொன்னால் அதற்கு என்ன பொருள்? என்னுடைய முழுப் பணத்தையும் வட்டி சேர்த்து வாங்கியே தீருவேன்" என்று சொல்லி தன்னுடைய பணத்திற்குரிய நெல்லை எடுத்துக் கொண்டு விட்டான்.

இந்த கதையிலிருந்து, நாம் கொடுக்க வேண்டிய கடனைக் கிருஷ்ணார்ப்பணம் என்று சொல்லித் தப்பித்துக் கொள்ள முடியாது. இவ்விதமே பகவானின் ஆணைப்படிச் செய்யப்படுகின்ற நல்ல கர்மங்களை அவருக்கு அர்ப்பணம் செய்ய முடியும். செய்வதனால், பந்தமும் தீரும். ஆனால் அசுப கர்மங்களின் பயனை அநுபவித்தே ஆகவேண்டும். இந்த கதையிலிருந்து புண்ணியங்களுக்கு ஒரு விதி என்றும், பாவங்களுக்கு ஒரு விதி என்றும் புரிகிறது. பகவானுக்கு அர்ப்பணம் செய்தால் கடனோ, பாவமோ தீர்ந்துவிடும் என்ற ஒரு விதி இருக்குமானால் எல்லா உயிர்களுமே முக்தி அடைந்து விடலாம். ஆனால் இது அவ்விதம் நடக்காது. ஆமாம், இதில் மிகவும் ஆழமான ஒரு தத்துவம் இருக்கிறது. பகவானிடத்தில் முழுமையாக நம்மை அர்ப்பணம் செய்து கொண்டோமானால், அதாவது அவனுடைய சரணங்களை முழுமையாக அடைந்து விட்டோமானால் பாவம், புண்ணியம் இரண்டுமே அழிந்துவிடும்.

**ஸர்வதர்மான்பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ**
**அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:**

எல்லாத்தருமமும் விட்டென்பால் ஏகம் எனையே சரணடைவாய்!
வில்லோய்! பாவங்களினின்று விடுவிப்பேன்யான் வருந்தாதே.

கீதை 18-ம் அத்தியாயம் 66 வது ஸ்லோகம் இதைச் சொல்லுகிறது. ஸ்ரீமத் பாகவதத்திலும் ஒரு ஸ்லோகம் இருக்கிறது. அது பின்வருமாறு :

தேவர்ஷிபூதாப்தந்ருணாம் பித்ருணாம்
ந கிங்கரோ நாயம்ருணீ ச ராஜந்
ஸர்வாத்மநா ய: சரணம் சரண்யம்
கதோ முகுந்தம் பரிஹ்ருத்ய கர்தம்

[ஸ்ரீமத் பாகவதம் 11/5/41]

அரசே! எல்லாவற்றையும் விட்டு முழுமையாக எவன் சரணாகத வத்ஸலனான பகவான் பாதங்களில் சேருகிறானோ அவன் தேவர், முனிவர், குடும்பம், பித்ருக்கள் யாருக்குமே கடன் பட்டவனாக மாட்டான், யாருக்கும் சேவகனல்ல.

மற்றொரு ஐயமும் எழலாம். சுகமும், சௌக்கியமும் ப்ராரப்த கர்மத்தின் பயனாக ஏற்படுகிறது என்கிறார்கள். இது நமக்கு விளங்குவது இல்லை. வருமான வரி, வியாபார வரி முதலிவற்றை கொடுக்காமல் இருந்தால் பணம் மிஞ்சுகிறது. வரியைக் கட்டினால் பணம் போய்விடுகிறது. இப்பொழுது பணம் போவதும், வருவதும் ப்ராரப்தத்தினால் ஏற்பட்டதா? இது திருட்டுக்கல்லவா கட்டுப்பட்டிருக்கிறது.

இதற்குச் சமாதானம் பின்வருமாறு இருக்கிறது. உள்ளபடி பணம் பெறுவதும், போகங்கள் அநுபவிப்பதும் ப்ராரப்தத்தையே முக்கியமானதாக கொண்டிருக்கின்றன. ஆனால் இவ்விரண்டில் சிலருக்குப் பணத்தை சம்பாதிப்பதில் ப்ராரப்தம் பங்கு வகிக்கிறது. ஆனால் அவர்களுக்குத் துய்க்க அதிர்ஷ்டம் (ப்ராரப்தம்) இருப்பதில்லை. சிலருக்கு ப்ராரப்தத்தின் காரணமாக இரண்டுமே கிடைக்கின்றன. பணம் அடையும் ப்ராரப்தமுள்ளவனிடம் லட்சக்கணக்கான ரூபாய் சேர்ந்திருக்கலாம். ஆனால் வியாதி இருக்கும். வைத்தியர்கள் தடுப்பார்கள். போகங்களை அநுபவிக்க முடியாது. அவனுக்கு சுவையில்லாத உணவுகளே சாப்பிட வேண்டியிருக்கும். பணத்திற்கு அதிருஷ்டம் உள்ளவன் பணம் இல்லாது போனாலும் கூட போகங்களில் ஒரு குறைவும் இருக்காது.

எல்லாவற்றையும் விட்டவனுக்குக் கூட பிரியமான பொருள்கள் கிடைப்பதைப் பார்க்கிறோம். அவன் அவற்றை ஏற்றுக் கொள்ள மாட்டான். அது வேறு விஷயம். தியாகத்தில் ஒரு விசித்திரமான நிலை என்னவென்றால் பணத்தைப் பெரிதாக எண்ணாதவர், பணத்திற்கு எந்த விதத்திலும் அடிமையாக விரும்பாதவன். அவனுக்குப் பணம் ஒரு புதிய ப்ராரப்தமாகி விடுகிறது. ஏனென்றால் தியாகம் என்பது புண்ணியச் செயல். அது உடனே ப்ராரப்தமாக மாறிவிடும் தன்மை கொண்டிருக்கிறது.

**தான நஹீ(ம்) தீணோ(ம்) நஹீ(ம்) நஹீ(ம்) ருபையோ ரோக்
ஜிமண பைட்யா ராமதாஸ் ஆந மிலை ஸப் தோக்**

*ராமதாஸ் என்ற பக்தர் சொல்கிறார்:*

தானியமும் இல்லை; மற்ற பொருளும் இல்லை; வாங்கலாம் என்றால் காசும் இல்லை. ஆனால் ராமதாஸ் சாப்பிட உட்கார்ந்தார். எல்லாம் மொத்தமாக வந்து சேருகிறது! [தீணோ(ம்)] என்ற சொல்லுக்கு சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறு பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது.

மேலே நான் சொன்ன போகம் சம்மந்தப்பட்ட அதிருஷ்டக்காரனுக்கு, மற்றவர்கள் தயவினால், நண்பர்களின் உதவி யினால் வேலை கிடைத்து விடலாம். ப்ராரப்தத்திற்குத் தக்கபடி வாழ்க்கைக்கு வேண்டிய வசதிகள் கிடைத்துக் கொண்டிருக்கும்.

பணத்திற்குக் [அதிருஷ்டம்] கொடுப்பினை இல்லையென்றால் திருடினாலும் பணம் கிடைக்காது. மேலும் திருட்டு வெளியாகி இருக்கிற பணமும் போய் தண்டனையும் கிடைக்கும். தண்டனை இங்கு கிடைக்கிறதோ, இல்லையோ பரலோகத்தில் கண்டிப்பாய் கிடைக்கும். அதிலிருந்து அவன் தப்ப முடியாது. ப்ராரப்தத்தின் காரணமாக பணம் கிடைத்தாலும் கூட அதை அவன் சுகிக்க முடியாது. வியாதி, திருட்டு, கொள்ளை, வழக்கு எந்த வகையிலாவது அந்த பணம் போய்விடும். மொத்தமாக கருத்து என்னவென்றால் பணம் எத்தனை நாட்கள் வரை இருக்கவேண்டும் என்று விதி நிர்ணயித்திருக்குமோ அவ்வளவு நாட்களே தங்கி இருக்கும். பிறகு நசித்து விடும். அது மட்டுமல்ல வருமானவரி முதலியவற்றில் திருட்டுத்தனம் செய்வதால் மனதில் ஏற்படுகிற ஸம்ஸ்காரங்கள் பல பிறவிகளில் அவனைத் திருடத் தூண்டிக் கொண்டேயிருக்கும். அவன் அதன் காரணமாகத் தண்டனைப் பெற்றுக் கொண்டேயிருப்பான்.

பணத்திற்குக் கொடுப்பினையிருந்தால் அவனை யாராவது தத்து எடுத்துக் கொள்ளுவார்கள் அல்லது சாகின்ற பணக்காரன் ஒருவன் அவன் பெயரில் தன் சொத்தை எழுதி வைத்துவிட்டுப் போய்விடுவான். அல்லது எங்கேயாவது தோண்டுவான் அங்கே புதையல் கிடைக்கும். இவ்விதம் ப்ராரப்தத்தின் பயனாக எந்தப் பணம் கிடைக்க வேண்டுமோ அது எந்த வகையிலாவது கிடைத்துவிடும்.

ப்ராப்தவ்யமர்(த்)தம் லபதே மனுஷ்யோ
தைவோऽபி தம் லங்கயிதும் ந சக்த:
தஸ்மாந்ந சோசாமி ந விஸ்மயோ மே
யதஸ்மதீயம் ந ஹி தத்பரேஷாம்

கிடைக்க விதிக்கப்பட்ட பொருள் மனிதனுக்கும் கிடைத்தே தீரும். கடவுளும் கூட அதைக் கடக்க முடியாது. இதனால் நான் வருந்துவதுமில்லை, வியப்பதுமில்லை. எனக்கு என்று ஏற்பட்டது பிறருடையதாக மாட்டாது.

ஆனால் மனிதன் ப்ராரப்தத்தையும் நம்புவதில்லை. புருஷார்த்தத்தை [மனித முயற்சியை] நம்பி உழைத்துச் சாப்பிடுவோம் என்றும் எண்ணுவதில்லை. அதனால் தான் அவனுக்குத் திருடுதல் போன்ற கெட்ட முயற்சிகளில் செயல்பாடு ஏற்படுகிறது. அவனுடைய உள்ளத்தில் ஒரு எரிச்சல் இருக்கிறது. மற்றவர்களிடம் இருந்து மறைக்கிறான். பிடிபட்டால் தண்டனை அடைய நேரிடுகிறது. மனிதன் நம்பிக்கையும், சந்தோஷமும் கொண்டிருந்தால் அவன் உள்ளத்தில் அமைதி, ஆனந்தம், இனிமை முதலியவை நிரம்பி நிற்கும். வரவேண்டிய பணம் வந்துவிடும். வாழ்க்கைக்கு என்ன வேண்டும் என்று ப்ராரப்தத்தில் இருக்கிறதோ அந்தப் பொருள் எந்தவிதமாகவாவது கிடைத்து கொண்டேயிருக்கும்.

வியாபாரத்தில் நஷ்டம் ஏற்படுவது, வீட்டில் ஏதாவது சாவு நிகழ்வது, காரணம் இல்லாமலேயே அவமானமும், கெட்ட பெயரும் பெற நேரிடுவது போன்ற துக்கம் தரும் சூழ்நிலையை யாரும் வேண்டுவதில்லை. இருந்தும் அவை வந்து விடுகின்றன. இவ்விதமே சுகம் தரும் சூழ்நிலையும் வரும். அதை யாரும் தடுக்க முடியாது. பாகவதத்தில் பின்வரும் ஸ்லோகம் வந்திருக்கிறது :-

ஸுகமைந்த்ரியகம் ராஜன் ஸ்வர்கே நரக ஏவ ச
தேஹினாம் யத் யதா து:கம் தஸ்மான்னேச்சேத தத் புத:
[பாகவதம் 11/8/1]

இதன் பொருள்: உயிர்களுக்கு அவை விரும்பாமலேயே ப்ராரப்தத்தின் பயனாக துக்கம் வந்து சேருவது போலவே சுவர்க்கத்திலும், நரகத்திலும் இந்திரிய [அநுபவம்] சுகம் கிடைத்துவிடும். அதனால் அறிவாளி அந்த சுகங்களை விரும்பக்கூடாது.

பணப் ப்ராரப்தம் வேறு, போக ப்ராரப்தி வேறு என்று ஏற்கனவே சொல்லி இருக்கிறோம். ஒருவனுக்கு பண ப்ரார்த்தம் இருக்கிறது. வேறு ஒருவனுக்குப் போகப் ப்ராரப்தமிருக்கிறது. இவ்விதமே தர்ம முயற்சியும், மோக்ஷ முயற்சியும் தனித்தனி. அதாவது ஒருவன் தர்மத்திற்காகப் [புருஷார்த்தம்] முயற்சி செய்கிறான். மற்றொருவன் மோக்ஷத்திற்கு முயற்சி செய்கிறான். தர்ம முயற்சி யில் உடல், பணம் முதலிய பொருள்களுக்கு முக்கியத்துவம் இருக்கிறது. மோக்ஷ முயற்சியில் எண்ணமும், சிந்தனையும் [பாவம், விசாரம்] முக்கியத்துவம் இருக்கிறது.

ஒன்றில் 'செயல்பாடு' இருக்கிறது. மற்றொன்றில் ஆதல் நிலை இருக்கிறது. இரண்டு இலாக்காக்களும் [துறைகளும்] தனித்தனி. செய்ய வேண்டியது கடமை. ஆதல் என்பது பயன். மனிதனுக்கு கர்மம் செய்ய அதிகாரமுண்டு, அதாவது அவன் செய்ய முடியும். ஆனால் பயனில், அவனுக்கு அதிகாரம் கிடை யாது; அவன் ஆட்சியில்லை. "கர்மணி ஏவ அதிகாரஸ்தே மா பலேஷு கதாசன" [கீதை 2/47] இதிலிருந்து ஆதலின் நிறைவு ப்ராரப்தத்தின் படி அவசியம் கிடைக்கும். அதற்கு அப்படி ஆக வேண்டும், இப்படி ஆக க் கூடாது. என்று ஆசைப்படக் கூடாது. ஆனால் கடமையான கருமத்தைச் செய்யும்பொழுது ஸாஸ்திர விதிகளுக்கும், உலக மரியாதைக்கும் கட்டுப்பட்டுச் செய்யவேண் டும். செய்வது முயற்சிக்குட்பட்டதாகும். ஆன்ால் ஆவதோ' ப்ராரப்தத்தின் வசப்பட்டது. இதனால் தான் மனிதன் 'செய்யும் விஷயத்தில்' சுதந்திரமாக இருக்கிறான். ஆனால் ஆகும் விஷயத் தில் பராதீனமாக [பிரிதொன்றுக்குக் கட்டுப்பட்டு] இருக்கிறான். மனித முன்னேற்றத்தில் சிறப்பான அம்சம் செய்யும் பொழுது கவனமாய் இரு. ஆனதைக் கொண்டு திருப்தியாயிரு.

**கிரியமாண [நிகழ்நிலை], ஸஞ்சித [சேர்ந்துள்ள], ப்ராரப்த [பயன் அளிக்கத் தொடங்கிவிட்ட] கர்மங்களில் இருந்து - இந்த மூவகை கர்மங்களிலிருந்தும் விடுபட வழி என்ன?**

பிரகிருதி, புருஷன் என்று இரண்டு உண்டு. பிரகிருதியின் குணம் இடையறாத இயக்கம் அல்லது செயல்பாடு, அதாவது மாறுபாடு. புருஷனிடத்தில் மாறுதல் என்கிற செயலே கிடையாது. பிரகிருதியுடன் ஒட்டுறவு ஏற்பட்டு ஒருவன் பிரகிருதியில் ஒன்றிய புருஷனாக ஆகும்போது அவன் "செய்பவன்", "துய்ப்பவன்" ஆக ஆகிறான். எப்பொழுது புருஷன் [ஜீவாத்மா] பிரகிருதி யினுடைய சம்மந்தத்தை கத்தரித்து விடுகிறானோ அதாவது தன்னுடைய சொருபத்தில் தானே, தானாக நின்று விடுகிறானோ,

அப்பொழுது அவனை எந்தக் கர்மமும் தொட முடியாது, தொடர முடியாது.

ப்ராரப்தத்தைப் பற்றிய மற்ற உண்மைகள் வருமாறு :-

1. உணர்வின் விழிப்பு [அதாவது முக்தி உணர்வு] ஏற்பட்ட பிறகும் கூட ஞானிக்குப் ப்ராரப்தமுண்டு என்று சொல்லுவது அஞ்ஞானிகளுக்குப் புரிய வைக்க வேண்டும் என்பதற்காகத் தான். ஏனென்றால் சாதக, பாதகச் செயல்கள் நிகழ்வது ப்ராரப் தம். ஆனால் உயிர்களை மகிழ்விப்பதோ, துன்பம் அடையச் செய்வதோ ப்ராரப்தத்தின் வேலையில்லை. இது அஞ்ஞானத்தின் [அறியாமையின்] வேலை. அஞ்ஞானம் தீர்ந்து ஞானம் பெற்றவன் சுகம், துக்கம் இரண்டையுமே பெறமாட்டான். அவனுக்கு இது அநுகூலநிலை, அல்லது பிரதிகூலநிலை என்று மட்டுமே தெரியும். இந்த அறிவு குற்றமுள்ளதாக ஆகாது. ஆனால் சுகம், துக்கம் என்று மனதில் மாறுதலை ஏற்றுக் கொள்ளுவது தான் குற்றமாகும். எனவே உண்மையில் ஞானிக்குப் ப்ராரப்தம் கிடை யாது. இதை விளக்கமாகச் சொல்ல வேண்டுமென்றால் ஞானிக்கு ப்ராரப்தம் உண்டு என்று சொல்லும் பொழுது, ஏற்படு கின்ற சூழ்நிலையை வைத்துச் சொல்லுகிறோம். அவன் அந்த சூழ்நிலையை சுகமாகவோ, துக்கமாகவோ மாற்ற மாட்டான். அதனால் அவனுக்கு ப்ராரப்தம் இல்லை என்பதே உண்மையா கும்

2. ப்ராரப்தத்திற்கு ஏற்றவாறே புத்தி அமையும். எப்படியென் றால் ஓரே கடைத்தெருவில் ஒரு வியாபாரி பண்டத்தை விற்கி றான். மற்றொருவன் பண்டம் வாங்குகிறான். பின்னால் பண்டங்க ளின் விலை உயர்ந்துவிட்டால் விற்ற வியாபாரிக்கு நஷ்டம். வாங்கின வியாபாரிக்கு லாபம். பண்டங்களின் விலை இறங்கிவிட் டால் விற்றவனுக்கு லாபம். வாங்கினவனுக்கு நஷ்டம். இங்கே வாங்குகின்ற அல்லது விற்கின்ற புத்தி ப்ராரப்தத்தினால் ஏற்பட் டது. அதாவது நஷ்டமடைய வேண்டும் அல்லது லாபம் அடை யவேண்டும் என்று ப்ராரப்தத்தில் இருக்கிறதோ அதற்கேற்ற வாறு தான் முதலில் புத்தியும் ஏற்படுகிறது. அப்பொழுது தான் ப்ராரப்தத்திற்கு ஏற்றவாறு பலனும் ஏற்படும். ஆனால் வாங்குகிற, அல்லது விற்கிற வியாபாரத்தை நியாயப்படி செய்வதா? அல்லது அநியாய முறையில் செய்வதா? என்று முடிவு செய்வதற்கு மனி தனுக்கு முழு சுதந்திரமும் உண்டு. ஏனென்றால் இது நிகழ்நி லைச் செயல். ப்ராரப்தம் அல்ல.

3. ஒரு மனிதன் கையிலிருந்து கண்ணாடி கீழே விழுந்து உடைந்து விட்டது. இது அந்த மனிதனின் கவனக் குறைவா? அல்லது ப்ராரப்தமா?

செயலை புரியும்பொழுது கவனமாக இருக்க வேண்டும். ஆனால் ஒன்று ஆகிவிட்ட பிறகு அதை ப்ராரப்தம் நடக்க வேண்டியது, நடந்தது என்று எண்ணிவிட வேண்டும். நீ விழிப்புடன் இருந்திருக்க வேண்டும் என்பதற்குப் பொருள். இனி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மீண்டும் இந்தத் தவறைச் செய்யாதே என்பது தான் பொருள். அதாவது நடந்துவிட்டதை ப்ராரப்தம் என்று ஒத்துக் கொண்டுவிட வேண்டும். அதை கவனக் குறைவு என்று எடுத்துக் கொள்ளக் கூடாது. அதாவது ஒரு காரியத்தைச் செய்யும் பொழுது கவனமாய் இருப்போம். எதுவும் ஆகிவிட்டதானால் அப்பொழுது வீண் கவலையை விட்டு விடுவோம்.

4. ப்ராரப்தத்தினால் ஏற்படும் வியாதிக்கும் தவறான உணவைச் சாப்பிடுவதினால் ஏற்படும் வியாதிக்கும் என்ன வித்தியாசம்?

உணவுக் கோளாறினால் ஏற்பட்ட வியாதி மருந்தினால் தீர்ந்துவிடும். ஆனால் ப்ராரப்தத்தால் ஏற்பட்ட வியாதி மருந்தினால் தீராது என்றாலும் மஹா ம்ருத்யஞ்ஜய முதலிய ஜபங்கள், வேள்விகள் முதலிய அனுஷ்டானங்கள் செய்வதினால் ப்ராரப்த வியாதியும் தீரலாம். ஆனால் அனுஷ்டானம் பலம் வாய்ந்ததாய் இருக்க வேண்டும்.

வியாதியில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று மனதைப் பீடிக்கிற "ஆதி", இரண்டாவது உடலைப் பீடிக்கிற வியாதி. ஆதியிலும் இரண்டு வகை உண்டு. ஒன்று வருத்தம், கவலை முதலியனவாகும். இரண்டாவது பைத்தியம் பிடித்தல். வருத்தம், கவலை என்று இவை அறியாமையினால் ஏற்படுகிறது. அதனால் அறிவு ஏற்பட்டால் வருத்தம், கவலைகள் நீங்கி விடுகின்றன. ப்ராரப்தப் படியே பைத்தியம் பிடிக்கும். ஆனால் ஞானி பைத்திய நிலையிலும் தவறான அல்லது ஸாஸ்திரம் தடை செய்த செயல்களைச் செய்ய மாட்டான்.

5. தெரிந்தே செய்யப்படும் தற்கொலை, அகால ம்ருத்யு என்று சொல்லப்படுகிறது. தற்கொலை பண்ணிக் கொள்ளுகின்றவனுக்கு மீண்டும் ஒரு கொலை செய்த பாவம் சேரும். இது புது பாவச் செயலே அன்றி ப்ராரப்தம் ஆகாது.

விபத்துக்களால் ஏற்படும் சாவை எதிர்பாராத சாவு என்கி றோம். சாதாரணச் சாவு போல் எதிர்பாராச் சாவும் ப்ராரப்தத் தின் காரணமாக ஆயுள் முடிந்தபிறகு ஏற்படுகிறது.

**6. ஒரு மனிதன் மற்றொருவனைக் கொன்றுவிட்டான். அப்பொழுது அவன் சென்ற பிறவியின் பழிக்குப்பழி வாங்கி னான். இறந்தவன் முன் வினைகளின் பயனை அடைந்தான். பிறகு கொன்றவன் பெயரில் என்ன குற்றம்?**

ஆம், கொன்றவன் பெயரில் குற்றம்தான். ஏனென்றால் தண் டனை கொடுப்பது அரசன் உரிமை. அந்த உரிமை சாதாரண மனிதனுக்குக் கிடையாது. மற்றொருவன் அந்த மனிதனை கொலையாளிகளின் கைகளிலிருந்து விடுவித்து பத்து மணிக்கு அவனைக் கொன்று விடுகிறான் என்றாலும் இப்படிக் கொன்ற வனுக்கும் தூக்குத் தண்டனை விதிக்கப்படும். ஏனென்றால் குற்றவாளியைக் கொல்லும் கட்டளை அரசன் ஏவலர்களுக்கு கொடுக்கப்பட்டிருந்தது. உனக்கு யார் கொடுத்தார்கள்? கொல்லு பவன் நான் முற்பிறப்பில் நடந்ததற்காகப் பழி வாங்குகிறேன் என்று நினைவு கொள்ள மாட்டான். இருந்தாலும் கொல்லுவது அவன் குற்றமாகும். மற்றொருவரைக் கொல்லுவதற்கு யாருக்கும் அதிகாரம் கிடையாது. சாவை யாரும் விரும்புவதுமில்லை. மற்றொருவனைக் கொல்லுவது தன்னுடைய பகுத்தறிவை அவமதிப்பதாகும். மனிதனுக்கு விவேகம் அதாவது பகுத்தறியும் ஆற்றல் கிடைத்திருக்கிறது. அதன்படி நல்லதோ, கெட்டதோ செய்ய அவனுக்கு சுதந்திரமுண்டு. அதனால் விவேகத்தை அவமதித்து பிறரைக் கொல்லுவதோ, கொல்லும் போக்கை ஏற்றுக் கொள்ளுவதோ பெரும் குற்றமாம்.

இவ்விதம் சென்ற பிறவியின் பழிக்குப்பழி என்று சொல்லிக் கொண்டு ஒருவன் மற்றவனைக் கொன்று கொண்டே போனால் இந்த சங்கிலித் தொடர் அறவே அறாது. மனிதன் ஒருகாலும் முக்தி அடைய மாட்டான்.

சென்ற பிறவியின் பழிக்குப்பழி வாங்குதல் மற்ற யோனிகளில் பிறந்து செய்யப்படலாம். ஆனால் மனிதப்பிறவி பதில் கெடுதல் செய்வதற்காக ஏற்பட்டதல்ல. ஆனால் ஒருகால் சென்றப்பிறவி கொலையாளியை இப்பொழுது பார்க்கும் பொழுது இயற்கையா கவே வெறுப்பு ஏற்படலாம். கெட்டவனாக அவனுக்குத் தொல்லை கொடுப்பதும் குற்றம்தான். ஏனென்றால் இது புது கர்மம் ஆகி விடுகிறது.

ப்ராரப்தப்படிதானே ஒருவனுக்கு புத்தி ஏற்படும். பிறகு குற்றம் எங்கே?

புத்தியில் இருக்கும் துவேஷத்துக்கு [கெடுதல் செய்யும் வெறுப்பு], ஒருவன் பயப்படுவது தவறு. அறிவிலுள்ள விருப்பு வெறுப்புகளுக்கு வசப்படாமல் விவேகத்துக்கு முக்யத்வம் கொடுக்க வேண்டும். கீதையும் "புத்தியில் ராகத்வேஷங்கள் இருக்கின்றன, அவற்றின் வசப்படாதே" என்று சொல்கிறது. (கீதை 3/40) [தயோர்ன வசமாகச்சேத். 3/34]

7. ப்ராரப்தத்திற்கும், பகவத் கிருபைக்கும் என்ன மாறுபாடு?

இங்கே உயிருக்குக் கிடைப்பதெல்லாம் ப்ராரப்தத்தின்படியே கிடைக்கின்றன. ஆனால் ப்ராரப்த விதியை நடத்துபவன் பகவான். ஏனென்றால் கருமங்கள் ஜடமானவை, (உயிர் இயக்கமற்றவை). அவை பயன்தர முடியாது. பகவான் கட்டளைப்படியே தான் அவை பயன்தர முடியும். ஒரு மனிதன் நாள் முழுவதும் வேலை செய்கிறான். வேலைக்குத் தக்க கூலி கிடைக்கிறது உண்மை தான். ஆனால் அது வயலின் சொந்தக்காரன் மூலமாகவே கிடைக்கிறது. வேலை செய்தால் தான் பணம் கிடைக்கும். வேலை செய்யாமல் பணம் கிடைக்குமா என்ன? வேலைக்குத் தான் கூலி கிடைக்கிறது. ஆனால் எஜமானன் இல்லாமல் கூலி யாரிடமிருந்து கிடைக்கும். எங்கேயோ காட்டிற்குச் சென்று நாள் முழுவதும் வேலை செய்தாலும் கூலி கிடைக்குமா? கிடைக்காது. இது யார் சொல்லிச் செய்யப்பட்ட வேலை? கூலி கொடுப்பது யாருக்குப் பொறுப்பு? என்பதைப் பார்க்க வேண்டும்.

ஒரு வேலைக்காரன் வேலையைத் திறமை, உற்சாகம், ஈடுபாட்டுடன் முதலாளியை மகிழ்விக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்தால் முதலாளி பேசிய கூலியைவிட அதிகம் கொடுக்கிறான். மேலும் சென்று தன்னுடைய சொத்துக்குப் பங்காளி ஆகவும் ஆக்கிக் கொள்ளுகிறான். அவ்விதமே ஈச்வரன் கட்டளைப்படி அவரை திருப்தி செய்யவே எல்லாக் காரியங்களையும் செய்தால் பகவான் அவனுக்கு மற்றவர்களை விட அதிக நன்மைகள் தருகிறான். தவிர பகவானிடத்தில் தன்னை முழுவதுமாக அர்ப்பணித்துக் கொண்டு செயல்களைச் செய்பவன் பக்தனாகிறான். அப்படிப்பட்ட பக்தனுக்கு பகவானே பக்தனாகி விடுகிறான்.

'ஏவம் ஸ்வபக்தயோ ராஜன் பகவான் பக்தபக்திமாந்'

[ஸ்ரீமத் பாகவதம் 10/86/59]

உலகில் எந்த முதலாளியும் தன் வேலைக்காரனைத் தன்னுடைய முதலாளி ஆக்கிக் கொள்ள மாட்டான். ஆனால் பகவானோ தன்னைச் சரணடைந்த பக்தனைத்தனக்கு எஜமானனாக ஆக்கிக் கொள்ளுகிறான். இந்த பெருந்தன்மை பிரபு பகவானிடத்தில் மட்டும் தான் இருக்கிறது. இப்படிப்பட்ட பிரபுவின் பாதங்களில் சரணடையாமல் எந்த மனிதன் தோன்றி அழியும் பதார்த்தங்களுக்கு அடிமையாகி நிற்கின்றானோ அவன் புத்தி எல்லா விதத்திலும் இழிந்து விட்டது என்று கொள்ள வேண்டும். "நமக்கு எதிரேயே பிறந்து அழியும் பொருள்கள் நமக்கு எவ்வளவு உதவ முடியும்?

இந்த விஷயத்தை சாமானிய மனிதர்கள் புரிந்து கொள்ள முயற்சிக்க வேண்டும்.

[கீதை 18/12 ன் விரிவுரையிலிருந்து]

## வருண வ்யவஸ்தை எதற்காக?
## [வருணப் பகுப்பின் பொருள்]

கருமங்கள் இரண்டு வகைப்பட்டவை: (1) பிறவியைத் தொடங்குபவை, (2) போகம் தருபவை. எந்தக் கருமங்களின் பயனாக உயர்ந்த அல்லது தாழ்ந்த பிறவிகளில் பிறப்பு ஏற்படுகிறதோ அதைப் பிறப்பைத் தொடங்கும் கருமங்கள் என்று சொல்லுகிறோம். எவற்றின் காரணமாக சுகம் அல்லது துக்கத்தின் அநுபவம் ஏற்படு கிறதோ அவற்றை போகம் தரவல்ல கர்மங்கள் என்று சொல்லுகின்றோம். சூழ்நிலைகளைத் தரும் கர்மங்களை கீதை அனிஷ்டம், இஷ்டம், மிச்ரம் என்று அழைக்கிறது [18/12].

ஆழ்ந்து நோக்கினோமானால் கருமங்களே போகம் அல்லது அநுபவம் தருபவைதான். ஜன்மம் தொடங்கும் கருமங்களும் அநுபவத்தைக் கொடுக்கின்றன. போகத்திற்கான கருமங்களும் அநுபவம் அல்லது போகத்தைத் தருகின்றன. எடுத்துக்காட்டாக உயர்ந்த குலத்தில் பிறந்தவனுக்கு மரியாதை கிடைக்கிறது, பாராட்டுக் கிடைக்கிறது. ஆனால் கீழ்க்குலத்தில் பிறந்தவனை அவமதிக்கிறார்கள், ஒதுக்குகிறார்கள். அதேமாதிரி சுகம் தரும் சூழ்நிலை கொண்டவனுக்கு மதிப்பு ஏற்படுகிறது. துக்கச் சூழ்



நிலையில் இருப்பவனுக்கு அவமதிப்பு ஏற்படுகிறது. அதாவது மரியாதை, அவமரியாதை என்ற உருவத்திலுள்ள போகம், பிற வியைத் தொடங்கும் கருயங்கள், போகம் தரும் கருமங்கள் இரண்டு வகை கருமங்களாகவும் ஏற்படுவது தான். ஆனால் ஜன்மாரம்பகக் கருமங்களினால் ஏற்படும் ஜன்மத்தில் மரியாதை அல்லது அவமரியாதையாகக் கிடைக்கும் போகம் முக்கியமல்ல. ஏனென்றால் மரியாதை, அவமரியாதை எப்பொழுதாவது கிடைக் குமே தவிர எப்பொழுதும் கிடைக்காது. ஆனால் போகம் தரும் கருமங்களின் பயனாக சாதக, பாதக சூழ்நிலை வருகிறதே அந்த சூழ்நிலையின் போகம் முக்கியமானது. ஏனென்றால் பரிஸ்திதி அல்லது சூழ்நிலை எப்பொழுதும் வந்து கொண்டே இருப்பதாகும்.

போகம் விளைவிக்கும் கருமங்களை உபயோகிக்கும் முறைக ளில் நல்லவையோ, கெட்டவையோ தேர்ந்து கொள்ளுவதற்கு மனிதனுக்கு சுதந்திரம் உண்டு. அவன் எந்த சூழ்நிலையிலும் அவன் விரும்பும்படி சுகமாகவோ, துக்கமாகவோ இருக்க முடி யும். அதற்கேற்ற சாதகங்களையும், உபகரணங்களையும் அவன் ஏற்படுத்திக் கொள்ள முடியும். எவன் சூழ்நிலையைப் பொறுத்து சுக, துக்கம் அநுபவிக்கிறானோ அவன் அசடன். ஆனால் அதையே சாதன உபகரணங்களாக மாற்றிக் கொள்ளுகிறார் களோ அவர்கள் புத்திசாலியான சாதகர்கள் [முயற்சியாளர்கள்]. அனுகூல, பிரதிகூலமான சூழ்நிலையை எப்படி சாதனைக்கு உபகரணமாக மாற்றிக் கொள்ளுவது?

அநுகூல சூழ்நிலை வரும்பொழுது அதை பிறருடைய நன் மைக்காகப் பயன்படுத்த வேண்டும். பிரதிகூல நிலைமை வந் தால் சுகத்தின் இச்சையை விட்டுவிட வேண்டும். மற்றவருக்குச் சேவை செய்வதும், சுகத்தின் இச்சையைத் தியாகம் செய்வதும் இந்த இரண்டும் சாதனங்களாகும். சாதனம் என்றால் நற்கதி அடைய மனிதன் செய்யும் செயல்கள்.

சாஸ்திரத்தில், உயிர் [ஜீவாத்மா] புண்ணியம் அதிகமானால் சுவர்க்கத்திற்கும், பாவம் அதிகமானால் நரகத்திற்கும் போகிறது. புண்ணியமும், பாவமும் சமமாயிருந்தால் மனிதன் ஆகிறது. இதைக் கொண்டு பார்த்தால் எந்த வர்ண, ஆசிரம, தேசத்தவ னானாலும், ஒருவன் முழுமையாக புண்ணியாத்மாகவோ, பாவி யாகவோ இருக்க முடியாது.

சமமான புண்ணியமும், பாவமும் கொண்டு மனிதனாக ஆகும் பொழுது அவனிடத்திலும் புண்ணிய, பாவத்தில் சற்று ஏற்றக்

குறைவு இருக்கும். அதாவது ஒருவனிடம் புண்ணியம் அதிகமிருக்கும். ஒருவனிடத்தில் பாவம் அதிகமிருக்கும்.

இது எப்படி என்றால் தேர்வில் [பரீட்சையில்] அநேக விஷயங்கள் இருக்கின்றன. [வினா-தாள்கள்] அவற்றில் ஒரு தாளில் அதிகம் மதிப்பெண்களும், மற்றொன்றில் குறைந்த மதிப்பெண்களும் கிடைக்கின்றன. எல்லாத்தாள்களையும் சேர்த்து எவ்வளவு மதிப்பெண்கள் வருகின்றனவோ அவைகளைக் கொண்டு தான் தேர்வு முடிவுகள் செய்யப்படுகின்றன. இவ்விதம் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு பகுதியில் அதிகப் புண்ணியமும் அதிகபாவமும் சேருகின்றன.

எல்லாவற்றையும் கூட்டி எவ்வளவு புண்ணிய, பாவங்கள் இருக்கின்றனவோ அவற்றிற்கேற்றவாறு பிறவி கிடைக்கிறது. தனித்தனி விஷயங்களில் எல்லோருடைய புண்ணிய, பாவமும் சமமாக இருந்தால் எல்லோருக்குமே ஒரே மாதிரி சுகம் அல்லது துக்கம் தரும் பொருள்நிலை கிடைக்க வேண்டும். ஆனால் அப்படி நடப்பதில்லை. இதனால் எல்லோருடைய பாவ, புண்ணியத்திலும் பலவிதமான ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன. இதேதான் ஸத்துவம் முதலிய குணங்கள் விஷயத்திலும் அமைத்துப் பார்க்க வேண்டும்.

குணங்களிலும் பிரிவுகள் உண்டு. எல்லாவற்றையும் சேர்க்கும்பொழுது ஸத்துவ குணம் அதிகமாயிருந்தால் அப்படிப்பட்டவர்கள் மேல் உலகத்திற்குச் செல்லுகிறார்கள். ரஜோ குணம் அதிகமுள்ளவர்கள் நடு உலகம், அதாவது மனித லோகத்திற்கு வருகிறார்கள். தமோ குணம் அதிகமுள்ளவர்கள் கீழ்நிலைக்குச் செல்லுகிறார்கள். இம் மூவகையினரிலும் கூட குணங்களின் ஏற்றத் தாழ்வுகளின் காரணமாக அநேகவித பேதங்கள் இருக்கின்றன. ஸத்துவ குணம் அதிகம் பெற்றவன் பிராமணன் ஆகிறான். ரஜோ குணம் முக்கியமாகவும், சத்துவ குணம் குறைவாகவுமுள்ளவன் க்ஷத்திரியனாகிறான். ரஜோ குணத்தைப் பிரதானமாகவும், தமோ குணத்தை கௌணமாகவும் (குறைந்த அளவிலும்) கொண்டவன் வைசியனாகவும், தமோ குணத்தைப் பிரதானமாகக் கொண்டவன் சூத்திரனாகவும் ஆகிறான். இப்படிச் சொல்லும் பொழுது புது நிலையில் குணங்களைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இவைகளுக்கு உள்ளேயே இருக்கின்ற ஏற்றத்தாழ்வுகளைப் பற்றித் தெரிந்து கொள்ளுவோம்.

ரஜோகுணம் பிரதானமான மனிதர்களுள் சத்துவ குணத்தின் ஆதிக்கமுள்ளவர்கள் பிராமணர்கள் ஆனார்கள். இப் பிராமணர்

களிடையேயும் ஜன்மத்தின் பேதத்தினால் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்று இருக்கின்றார்கள். மேலும் சூழ்நிலைகளின் உருவத்தில் கருமங்களின் பயனும் பலவிதங்களில் மாறுபட்டுக் கிடைக்கிறது. அதாவது எல்லா பிராமணர்களுக்குமே ஒரேதரமான சுகம் அல்லது துக்கம் தரும் சூழ்நிலை ஏற்படுவதில்லை. இதைப் பார்க்கும் பொழுது பிராமணப் பிறவியிலும் மூன்று குணங்கள் உண்டு என்று ஒத்துக் கொள்ள வேண்டும். இவ்விதமே க்ஷத்தி ரிய, வைசியர்களிலும் கூட பிறப்பினால் ஏற்றத் தாழ்வு ஒத்துக் கொள்ளப்படுகிறது. சுகமோ, துக்கமோ தரும் சூழ்நிலையும் பலவிதமாகக் கிடைக்கிறது. கீதை மூன்று உலகங்களிலும், இந்த மூன்று [சத்துவ், ரஜோ, தம] குணங்களுக்குட்படாத வஸ்துவே இல்லை என்று சொல்லுகிறது [18/40].

இப்பொழுது மனிதப் பிறவியில்லாத மிருகங்கள், பறவைக ளிலும் உயர்ந்தவை, தாழ்ந்தவை என்று இருக்கின்றன. பசுவை உயர்வாகக் கருதுகிறோம். நாய், கழுதை, பன்றி முதலியவற்றைத் தாழ்வாகக் கருதுகிறோம். புறா உயர்ந்தது. காக்கை, கழுகு முதலியன தாழ்ந்தவை. இவற்றிற்கும் சுகமோ அல்லது துக்கமோ தரும் சூழ்நிலை ஒரே மாதிரி வருவதில்லை. தாத்பரியம் [கருத்து] என்னவென்றால் மேற்கதி, நடுகதி, கீழ்கதியில் போகின்றவர்க ளிலும் கூட பலவித ஜாதி பேதமும், சூழ்நிலையும் இருக்கவே செய்கின்றன.

[கீதை 18/41 ன் விரிவுரையிலிருந்து]

## ஜன்மத்தால் ஜாதியா அல்லது கருமத்தாலா?

உயர்ந்த அல்லது தாழ்ந்த இனங்களில் [யோனிகளில்] எவ் வளவு உடல்கள் ஏற்பட்டாலும் அவையெல்லாம் குணம், கர்மம் இவற்றிற்கு ஏற்றவாறே அமைகின்றன. இக் கருத்தையும் முன்னே சொன்ன கருத்துக்களையும் பின்வரும் சுலோகங்களில் காணலாம்.

காரணம் குணஸங்கோSஸ்ய
ஸதஸத்யோனி ஜன்மஸு

[கீதை 13/21]

கர்மண: ஸுக்ருதஸ்யாஹு:
ஸாத்விகம் நிர்மலம் பலம்
ரஜஸஸ்து பலம் து:கம்
அக்ஞானம் தமஸ: பலம்

[கீதை 14/16]

ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்த்தா:
மத்யே திஷ்டந்தி ராஜஸா:
ஜகன்யகுணவ்ருத்திஸ்தா:
அதோ கச்சந்தி தாமஸா:

[கீதை 14/18]

குண கர்மத்திற்கு ஏற்றவாறு தான் மனிதனுக்குப் பிறவி ஏற்படுகிறது. அதனால் மனிதனின் ஜாதி பிறவியினால் என்று ஏற்றுக் கொள்ளப்படுகிறது. தூலமான உடலை வைத்துக் கொண்டு பார்க்கும் பொழுது மண உறவு, உணவு முதலியவை பிறவியைப் பிரதானமாகக் கொண்டு செய்ய வேண்டும். தன்னுடைய ஜாதிக்கு [வருணத்திற்கு] ஏற்றவாறு சாப்பாடு, விவாகம் முதலிய கருமங்களைச் செய்ய வேண்டும். இரண்டாவது: எவனுக்கு லௌகிக போகம், பணம், மானம், சுகம் முதலியவை குறிக்கோளாக இருக்குமோ அவனுக்கு தன் ஜாதிக்குரிய கருமங்களைச் செய்வதும், வருணத்தின் மரியாதையைக் காத்து நடப்பதும் இன்றியமையாததாகிறது. அவன் வர்ணத்தின் மரியாதைக்குட்பட்டு நடக்காமல் போனால் அவனுக்கு வீழ்ச்சி ஏற்படுகிறது.

ஆசாரஹீனம் ந புனந்தி வேதா
யதப்யதீதா: ஸஹ ஷட்பிரங்கை:
சந்தாம்ஸ்யேனம் ம்ருத்யுகாலே த்யஜந்தி
நீடம் சகுந்தா இவ ஜாத பக்ஷா:

[வஸிஷ்ட ஸ்ம்ருதி]

சிக்ஷா, கல்பம், நிருக்தம், சந்தம், வியாகரணம், ஜோதிஷம் இந்த ஆறு அங்கங்களுடன் படித்த வேதம், நடத்தை கெட்ட மனிதனைத் தூய்மையாக்காது. இறகு முளைத்தவுடன் பறவை கூட்டை விடுவது போல சாவின் போது அவனை வேதம் விட்டு விடும். ஆனால் எவனுக்கு பரமாத்மாவே குறிக்கோளோ, லௌகிக சுகம் தேவையில்லையோ அவனுக்கு சத்சங்கம், [நல்லோர் இணக்கம்] நூல்படிப்பு, ஜபம், தியானம், புராணம் கேட்பது, கீர்த்தனம், பரஸ்பரம் விசாரம் செய்வது முதலிய பகவான் சம்மந்தப்பட்ட காரியங்களே முக்கியமாக இருக்கும். அப்பொழுது மனிதனின் பாரமார்த்திகமான [மேலுலக சம்மந்தமான] எண்ணங்கள், நடத்தை முதலியவை முக்கியம். சாதியோ, வர்ணமோ அல்ல.

மூன்றாவதாக பரமாத்மாவை அடைவதையே குறிக்கோளாகக் கொண்டவன் கூட பகவான் சம்பந்தபட்ட காரியங்களை முக்கியமாக செய்து கொண்டே வர்ண, ஆசிரமத்திற்கு விதிக்கப்

பட்ட கடமைச் செயல்களையும், பூஜை மனப்பாங்குடன் அதாவது பகவானுடைய பிரீதிக்காகச் செய்வான். பகவான் பின்வருமாறு சொல்லியிருக்கிறார்.

யத: ப்ரவ்ருத்திர்பூதானாம்
யேன ஸர்வமிதம் ததம்
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய
ஸித்திம் விந்ததி மானவ:

[கீதை 18/46]

இந்த ஸ்லோகத்தில் இந்த சிறந்த விஷயம் சொல்லப்பட்டு இருக்கிறது. எதிலிருந்து இந்த முழு ப்ரபஞ்சமும் வெளிவந்ததோ, எதனால் இந்த முழு ப்ரபஞ்சமும் ஊடுருவப்பட்டிருக்கிறதோ அந்த பரமாத்மாவைக் குறிக்கோளாகக் கொண்டு அவருடைய பிரீதிக்காகவே, பூஜையாகத் தங்களுடைய வருணத்திற்கு ஏற்ற வாறு கர்மங்கள் செய்யப்படட்டும். இதில் ஒவ்வொரு மனிதனுக் கும் [மனித மாத்திரத்திற்கு] அதிகாரம் உண்டு. தேவர்கள், அசுரர்கள், மிருகங்கள், பட்சிகளுக்கு தாமாக அதிகாரம் கிடை யாது. ஆனாலும் அவர்களுக்கும் பரமாத்மாவின் பக்கத்திலிருந்து தடையும் கிடையாது. எல்லோரும் பரமாத்மாவின் அம்சம். ஆகையினால் பரமாத்மாவை அடைவதில் எல்லோருக்கும் உரிமை உண்டு. ஒவ்வொரு பிராணிக்கும் பகவான் மேல் உரிமை இருக்கிறது. இதிலிருந்து பரஸ்பர விவகாரத்தில் அதாவது உணவு, விவாகம் முதலிய உடல் சம்மந்தப்பட்ட செயல்களில் பிறப்புக்கு முக்கியத்துவம் இருக்கிறது. பரமாத்மாவை அடைவ தில் எண்ணம், விவேகம், கருமம், இவை முக்கியப்பங்கு வகிக் கின்றன. இதை வைத்துக் கொண்டு தான் பாகவத ஆசிரியர் சொல்லுகிறார்: ஒரு மனிதனுடைய வர்ண லட்சணங்கள் மற் றொரு வர்ணத்தாரிடம் இருக்குமானால் அவனையும் அந்த வர்ணத்தைச் சார்ந்தவனாகவே எண்ண வேண்டும்.

"யஸ்ய யல்லக்ஷணம் ப்ரோக்தம்
பும்ஸோ வர்ணாபிவ்யஞ்ஜகம்
யதந்யத்ராபி த்ருச்யேத
தத் தேனைவ விநிர்திசேத்"

[ஸ்ரீமத் பாகவதம் 7/11/35]

கருத்து என்னவென்றால் பிராமணர்க்கு என்று எந்த லட்சணங் கள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அந்த லட்சணங்கள் அல்லது குணங்கள் யாரிடமாவது காணப்பட்டால் அவன் பிறவியினால் தாழ்ந்தவனாக இருந்தாலும் கூட அவனைத் தாழ்வாகக் கருதக்

கூடாது. இவ்விதமே மகாபாரத்தில் யுதிஷ்டிரர் நகுஷனுக்கு இடையே ஒரு பேச்சு வருகிறது. ஒரு சூத்திரன் நடத்தையில் சிறந்தவனாக இருந்தால் அந்த சூத்திரனை சூத்திரன் என்று சொல்லக் கூடாது. பிராமணன் பிராமண கருமங்கள் இல்லாம லிருந்தால் அவனை பிராமணன் என்றும் சொல்லக் கூடாது.

"சூத்ரே து யத் பவேல்லக்ஷம
த்விஜே தச்ச ந வித்யதே
ந வை சூத்ரோ பவேத் சூத்ரோ
ப்ராஹ்மணோ ந ச ப்ராஹ்மண:
யத்ரைதல்லக்ஷயதே ஸர்ப்ப
வ்ருத்தம் ஸ ப்ராஹ்மண: ஸ்ம்ருத:
யத்ரைதந்ந பவேத் ஸர்ப்ப
தம் சூத்ரமிதி நிர்திசேத்"
[மஹாபாரதம் வனபர்வம் 180/25- 26]

இங்கே கருமங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. ஜன்மத்திற்கு இல்லை.

ஸாஸ்திரங்களில் இப்படியெல்லாம் சொல்லப்படுவதின் உண்மைக் கருத்து என்னவென்றால் மிகத் தாழ்ந்த வருணத்தா னான மிக சாதாரணமான மனிதன் கூட பாரமார்த்திகத்தில் முன்னேற்றம் அடைய முடியும். இதில் ஐயத்திற்கு இடமே கிடை யாது. அது மாத்திரமல்ல. அந்த வருணத்தில் இருந்து கொண்டே புலனடக்கம், மன அடக்கம் போன்ற புது தர்மங்களை முழுமை யாகக் காத்து தன் பெருமையை வெளியிடவும் முடியும். பிறவி என்னவோ பூர்வ கர்மங்களுக்கு ஏற்றவாறு கிடைத்து விடுகிறது.

"ஸதி மூலே தத்விபாகோ ஜாத்யாயுர் போகா:"
[யோக தர்ஸனம் 2/13]

அவன் ஒன்றும் செய்ய முடியாது என்றாலும் அந்தப் பிறவியி லிருந்து கொண்டே புது முன்னேற்றத்தைப் பெற முடியும். இந்த புது முன்னேற்றத்திற்கு ஊக்கம் அளிப்பதற்காகவே ஸாஸ்திரங்க ளில் தாழ்ந்த வர்ணத்தவர் கூட முன்னேற்றத்தில் தைரியத்தை விடக் கூடாது என்ற கருத்துக் கொண்ட வாக்கியங்கள் இருக்கின் றன. உயர்ந்த வர்ணக்காரர் தனக்குரிய உயர்வான கருமங்களை விட்டுவிட்டால் அவனை தக்க கர்மங்கள் செய்யவும் ஸாஸ்திர வசனங்கள் உற்சாகம் தருகின்றன.

"ப்ராஹ்மணஸ்ய ஹி தேஹோSயம்
க்ஷுத்ரகாமாய நேஷ்யதே"

[பிராமணனுடைய உடல் கீழான ஆசைகளை விரும்பாது.]

சாப்பாடு, நடத்தை முதலியவைகளில் முற்றிலுமாக இழந்து விட்ட பிராமணர்களை வார்த்தையில் கூட மதிக்கக் கூடாது என்று வேதம் சொல்லுகிறது. ஆனால் இதற்கு மாறாக சிறந்த நடத்தையும், பகவத் பக்தியும் கொண்ட பிராமணர்களை பாகவதம் முதலிய புராணங்களிலும், மகாபாரதம், ராமாயணம் முதலிய இதிஹாச நூல்களிலும் மிகவும் புகழ்ந்து பேசப்பட்டிருக்கிறது.

மிகவும் தாழ்ந்த ஜாதியுடையவனாய் இருந்தாலும் கூட தெய்வபக்தி உடையவனாயிருந்தால் அவன் பக்தியில்லாத பிராமண வித்வானை விட உயர்ந்தவன் ஆகிறான்.

அஹோ பத ச்வபசோSதோ கரீயான்
யஜ்ஜிஹ்வாக்ரே வர்ததே நாம துப்யம்
தேபுஸ்தப்ஸ்தே ஜுஹுவு: ஸஸ்னுரார்யா
ப்ரஹ்மானூசுர் நாம க்ருணந்தி யே தே
[ஸ்ரீமத் பாகவதம் 3/33/7]

ஆஹா! எவனுடைய நாவின் நுனியில் தங்களுடைய பெயர் இருக்கிறதோ, அந்த சண்டாளன் கூட மிகச் சிறந்தவன். எந்தச் சிறந்த மனிதர்கள் தங்களுடைய பெயரை உச்சரிக்கிறார்களோ அவர்கள் தவம், ஹோமம், தீர்த்த ஸ்நானம், நன்னடத்தை, வேதாத்யயனம் எல்லாவற்றையும் செய்து விட்டார்கள். அதாவது அவற்றுக்கான பலனை அவற்றைச் செய்யாமலேயே உங்களுடைய பெயரைச் சொல்லுவதனாலேயே பெற்று விட்டார்கள்.

விப்ராத் த்விஷட்குணயுதாதரவிந்தநாப
பாதாரவிந்த விமுகாத் ச்வபசம் வரிஷ்டம்
மன்யே ததர்பிதமனோவசனே ஹிதார்த்த
ப்ராணம் புனாதி ஸ குலம் ந து பூரிமான:
[ஸ்ரீமத் பாகவதம் 7/9/10]

"என்னுடைய கருத்தில் பன்னிரண்டு நற்குணங்களைப் பெற்ற அந்தணன் கூட கமலநாபனான பகவானுடைய பாதங்களை நினைக்காமலிருந்துவிட்டால் அவனைவிட தன்னுடைய மனம், சொல், செயல், பணம், ஆவி ஆகியவற்றை பகவானுக்கு அர்ப்பணம் செய்த சண்டாளன் பெரியவன். ஏனென்றால் அவன் தன்

